உ

சிவமயம்.

ஸ்ரீ அமிருதகடேசுவராய நம:.

# திருக்கடவூர் க்ஷேத்திர புராணம்.




இது

புதுக்கோட்டை ஸமஸ்தானம்

கோனப்பட்டு நகரவாஸியாகிய

சு. ப. கு. சொக்கலிங்கம் செட்டியார்

அவர்களால் வெளியிடப்பட்டது



கும்பகோணம்

ஸ்ரீ கோமளாம்பா அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1925

உ

# முகவுரை.



பாசமான களைவார் பரிவார்க்கு அமுதம் அனையார்
ஆசைதீரக் கொடுப்பார் அலங்கல் விடைமேல் வருவார்
காசை மலர்போல் மிடற்றார் கடவூர்மயானம் அமர்ந்தார்
பேசவருவார் ஒருவர் அவர்எம் பெருமான் அடிகளே.

திருஞானசம்பந்தர்.

இவ்வுலகிலுள்ள ஸகல ஜனங்களும் தர்சனம்,வந்தனம், அர்ச்சனம் முதலியவைகளால் தம்மை ஆராதித்து ஸம்ஸார துக்கத்தை அறவேயொழித்து நித்யானந்தஸ்வரூபமாய் விளங்கும் மோக்ஷமென்னும்பரமபுருஷார்த்தத்தைப்பெற்று ஸுகித்திருக்கவேண்டுமெனக் கருதி கருணைக் கடலாயும், ஸ்ரீ பார்வதிதேவியின் பதியுமான சிவபெருமான் பற்பல புண்ணிய க்ஷேத்திரங்களிலும் தாமாக ஆவிர்ப்பவித்தும் பிரதிஷ்டைசெய்யப்பட்டும் பிரகாசிப்பது யாவராலும் அறியப்பட்ட விஷயமே. லோகக்ஷேமத்தையுத்தேசித்து இப்புவியில்தோன்றிய அந்த பரமேசுவருடைய ஸங்கற்பத்திற்கிணங்கப் பலதொண்டர்கள் முற்பிறவியில் செய்த பெரும் புண்ணியகர்மாக்களால் ஸ்ரீ மஹேசுவரரை விதிவழுவாது நன்காராதித்து அவருடைய அநுக்கிரஹத்தைப் பெற்றுச் சிறந்த பதவியையடைந்திருக்கிறார்களென்பது பக்தவிஜயம், பெரியபுராணம் முதலிய நூல்களில் நன்கு வரையப்பட்டிருக்கின்றது. இவ்விதம் அவதரித்த உமாபதியான ஸ்ரீ சங்கரரால் விளங்கும் க்ஷேத்திரங்களுக்குள் மேன்மைவாய்ந்ததும் மயூரம் (மாயவரம்) க்ஷேத்திரத்திற்குப் பத்து மைல் கிழக்

கிலும், மஹோததிக்கு (கிழக்கு ஸமுத்திரத்திற்கு) நான்கு மைல் மேற்கிலும் திருக்கடவூர் எனப் பெயர்வாய்ந்த ஓர் உத்தமமான க்ஷேத்திரம் விளங்குகின்றது. அந்த க்ஷேத்திரத்தில் ஸ்வயம்புவாய்ப் பிரகாசிக்கும் கௌரீநாதருக்கு அமிருதகடேசுவரர் என்கிற ஒரு காரணப்பெயரும் உண்டு. முன்னொரு ஸமயம் தேவர்களும், அஸுரர்களும் ஒன்று கூடித் திருப்பாற்கடலைக் கடைந்து அதிலிருந்தும் எடுக்கப்பட்ட அமுதத்தை ஒருகுடத்தில் எடுத்துக்கொண்டு மிகவும் பரிசுத்தமான ஸ்தலத்திலிருந்துகொண்டு அருந்தவேண்டுமென்று பலவிடங்களில் சுற்றியும் ஓரிடத்திலும் மனதிற்குத் திருப்தியேற்படாமல் கடைசியிலிந்த க்ஷேத்திரமே சிறந்ததெனக்கருதி இங்கு வந்துசேர்ந்தார்கள். வந்தவுடன் அமுதகடத்தை ஓரிடத்தில்வைத்துவிட்டு ஸ்நானம், அனுஷ்டானம் முதலியவைகளைச் செய்யச் சென்றார்கள். ஸகல நியமங்களையும் முடித்துக்கொண்டு அமுதகடத்தினிடம் வந்தார்கள். அக்கால் ஸ்ரீ மஹாவிஷ்ணு அதை எடுக்க எவ்வளவு முயன்றும் ஸாத்தியப்படவில்லை. அஃது அவ்விடத்திலேயே மேற்கு முகமான லிங்காகாரமாக ஆய்விட்டது. அதைப் பார்த்து தேவாஸுரர்களும் பக்திசிரத்தையுடன் பணிந்துபோற்றித் தம்மிருப்பிடம் சென்றுவிட்டார்கள். இதனால் அந்தக்ஷேத்திரத்தில் விளங்கும் ஈசுவரருக்கு அமிருதகடேசுவரர் என்கிற திருநாமம் ஏற்பட்டிருக்கிறது. மார்க்கண்டேயமஹரிஷி இந்த க்ஷேத்திரத்தையடைந்து உத்தமமான இந்த அமிருதலிங்கத்தை ஆராதித்துத் தாம் அதன் திருவருளால் ஸகல லோகங்களையும் ஸம்ஹாரம்செய்யும் சக்திவாய்ந்த யமனையும் ஜயித்திருக்கிறார். இவரால் இந்த க்ஷேத்திரத்தில் பல புண்ணியதீர்த்தங்களும் உண்டுபண்ணப்பட்டிருக்கின்றன. இன்னும் அநேகம் பக்தர்கள் இந்த க்ஷேத்திரத்தில் வந்து பகவானை ஆராதித்து ஸித்திபெற்றிருக்கிறார்கள்.

இது நான்குபக்கங்களிலும் பல க்ஷேத்திரங்களால் அலங் கரிக்கப்பட்டிருக்கின்றது. ஸகல தத்துவங்களையும் கசடறக் கற்றறிந்த சூதபுராணிகரே இதன் மஹிமையைப் பற்றித் தம்மால்கூற இயலாதென்றும், தாம் குருவிடமிருந்து கேட் டதைமாத்திரம் சொல்லஇயலுமென்றும் சொன்னால் இதன் மஹிமை எவ்விதமிருக்குமென்பதை நன்கறிந்துகொள்ள லாம். பூமியிலுள்ள க்ஷேத்திரங்களில் மிகச் சிறந்ததாயும் தேவாரப் பெரியோர்களால் பாடல்பெற்றதுமான இந்த க்ஷேத்திரத்தின் மஹிமையும் அங்கு விளங்கும் அமிருத கடேசுவரருடைய அநுக்கிரஹசக்தியும், அவரை ஆராதிக்க வேண்டிய முறையும், அங்குள்ள புண்ணியதீர்த்தங்களின் விபரங்களும், அவைகளின் மஹிமையும், இன்னின்ன விசேஷ புண்ணியகாலங்களில் அமிருதகடேசுவரரை ஆரா தித்தால் சீக்கிரம் ஸித்தியேற்படுமென்கிற அனேக விஷயங் களும் வடமொழியிலுள்ள இந்த க்ஷேத்திரபுராணத்தில் ஸ்பஷ்டமாயிருந்தாலும் எல்லாஜனங்களாலும் அதை நன்கு படித்து அறிந்துகொள்ளமுடியாதென்றும், ஸகல ஜனங் களுக்கும் இதன் மஹிமையை அறிவித்து ஸ்ரீ அமிருத கடேசுவரருடைய சிறந்த அநுக்கிரஹத்தைப் பெறும்படி செய்யவேண்டுமென்றும் லோகக்ஷேமார்த்தமாய் இதனை மொழிபெயர்க்க முயற்சி எடுத்துக்கொண்டவரும் புதுக் கோட்டைஸமஸ்தானத்திலுள்ள கோனாப்பட்டுநகரவாஸியு மான தனவைசிய இனத்தவராகிய சு.ப.கு. சொக்கலிங்கம் செட்டியார் அவர்கள் வடமொழியிலுள்ள இந்தப் புராணத் தைத் தமிழ்ப் பாஷையில் சரியாக மொழிபெயர்க்கவேண்டி கும்பகோணம் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகளான ஜகத்குரு ஸ்ரீ சங்கராசாரியஸ்வாமிகள் அவர்கள் திவ்ய ஸந்நிதியில் இந்த மூலகிரந்தத்தைஸமர்ப்பித்து "ஸமுகத்து ஆக்ஞைபால் இதைத் தமிழ்ப் பாஷையில் சரியாய் மொழி

பெயர்த்துக் கொடுக்கும்படி அனுக்கிரஹிக்கவேண்டும்" என்று பிரார்த்தித்தார்கள். கருணாநிதியான ஸ்ரீ ஜகத்குரு மஹாஸ்வாமிகள் அவர்களும் அந்தப் பிரார்த்தனையை அங்கீகரித்து உடனே என்னால் முன்ஜன்மங்களில் செய்யப்பட்ட அரும்தவத்தின் மஹிமையால் என்னைப்புனிதனாக்கவேண்டுமென்கிற இயற்கையிலுள்ள கருணையாலும் பிறருக்கேற்படாமல் இந்த உத்தமமான கைங்கர்யத்தைச் செய்யும்படி எனக்கு ஆக்ஞை செய்தார்கள். இவ்வித ஆக்ஞையைப் பெறும்படியான பாக்கியத்தை நாம் பெற்றோமேயென்று மனமகிழ்ச்சியுடன் ஸ்ரீ மஹாஸ்வாமிகள் அவர்களுடைய திருவடிகளின் தியானபலத்தைக்கொண்டு எனதுசிற்றறிவுக் கெட்டியவரையில் மூலத்திற்குச்சரியாக மொழிபெயர்க்கப் பட்டிருக்கிறது. இதை ஆஸ்திகர்களான சிவபக்தர்கள் அனைவரும் படித்து ஸ்ரீ அமிருதகடேசுவரரான பரமசிவத்தினுடைய அனுக்கிரஹத்திற்குப் பாத்திரர்களாகவேண்டுமாய் அறிவிக்கப்படுகின்றது. சுபம்.

மஹோபதேசக கவிரத்நம்,

ப. பஞ்சாபகேசசாஸ்திரி,

கும்பகோணம் ஜகத்குரு ஸ்ரீ சங்கராசாரியஸ்வாமிகள்

ஸ்ரீமடம் ஆஸ்தான வித்வான்,

ஆர்யதர்மம் உபபத்திராதிபர்.

---

சுபமஸ்து.

ஸ்ரீ குருசரணாரவிந்தாப்யாம் நம:

# பில்வாரண்யம் என்னும்வடமொழிச்சிறப்புப்பெயர்வாய்ந்த திருக்கடவூர் க்ஷேத்திரத்தின் மஹாத்மியம்.



## விநாயகர்துதி.

**शुक्लांबरधरं विष्णुं शशिवर्णं चतुर्भुजम् ।**
**प्रसन्नवदनं ध्यायेत्सर्वविघ्नोपशान्तये ॥**

*வெண்ணிறமான வஸ்திரத்தைத் தரிப்பவரும், நான்கு கரங்களையுடையவரும், திங்களொளிபோன்ற திருமேனியின் காந்தியையுடையவருமான எங்கும் வியாபகமாய் விளங்கும் கரிமுகக் கடவுளைச் சகல இடையூறுகளும் விலக வேண்டியதின்பொருட்டு எப்பொழுதும் தியானம் செய்வோமாக.*

## ஸ்ரீ அமுதலிங்கப் பிரார்த்தனை.

**निधानभूतो निखिलागमानां विधातृमुख्यामरवन्द्यमानः ।**
**क्रुधा पदाब्जेन हतान्तको वस्सुधाघटेशस्सुखमातनोतु ॥**

*ஸகல மறைகளுக்கும் ஆச்ரயபூதராயும், பிர்ம்மா முதலான விண்ணவர்களால் வந்தனைசெய்யத் தகுந்தவராயும், 'சிறந்த பக்தனான மார்க்கண்டேயனையும் ஹிம்ஸிக்க வருகிறானே' என்கிற கோபத்தால் தமது பத்மம்போன்ற பாதத்தால் இயமனை அடித்தவருமான அமிருதலிங்கேசுவரரெனத் திருநாமம்பூண்ட ஸ்ரீ பரமேசுவரன் உலகங்களுக்குச் சுகத்தையளிக்கட்டும்.*

## ஸ்ரீ அபிராமி அம்பாளைப் பிரார்த்திப்பது.

तटभुवि कुचसीम्नोस्तादृशाकारवत्या
नटनचलितहारा चारुचन्द्रावतंसा ।
स्फुटकुवलयनीला भूजितानङ्गचापा
घटयतु करुणार्द्रा काङ्क्षितं वोऽभिरामा ॥

உத்தமஜாதியிற் பிறந்த சிறந்த ஸ்திரீ ரத்னங்களுக்கு இருக்க வேண்டிய அனைத்து அங்க புஷ்டிகளோடும் கூடியவளும், நர்த்தனம் புரியும் காலத்தில் சலிக்கின்ற ஹாரங்களையுடையவளும், மிகவும் நேர்த்தியான திங்களைச் சிரஸ்ஸில் அலங்காரமாகச் சூடியவளும், நன்ருய் மலர்ந்த நீலோத்பல மலர்போன்ற நீலவர்ணத்துடன் கூடியவளும், மன்மதனது அழகிய வில்லையும் தம்முடைய அழகால்வென்ற புருவங்களை உடையவளும், கருணைப் பெருக்குள்ளவளும் அதிக அழகு பொருந்தியவளுமான ஸ்ரீபாதேவதையானவள் உங்களுக்கு வேண்டிய இஷ்டத்தைக் கொடுக்கட்டும்.

## ஸ்ரீ கோரகணபதியின் பொருட்டு வந்தனம்.

முன்னொருகாலத்தில் ஸகல மஹரிஷிகளுக்கும் வாஸஸ்தானமாயும் பலவகையான செடிகொடிகளாகிய புண்ய விருக்ஷங்களாலும், ஹம்ஸம், மான், மயில் முதலிய பக்ஷிக் கூட்டங்களாலும், அமுதத்தின் சுவையையும் பழிக்கத் தக்க சிறந்தபுண்ணிய தீர்த்தங்களாலும் அலங்கரிக்கப்பட்டு, மிகவும் பரிசுத்தமாய் விளங்கும் நைமிசாரண்யத்தில் அனேகம் ரிஷிகள் ஸ்ரீ பரமேசுவரனுடைய அனுக்கிரகத்தைப் பெறவேண்டிப் பன்னிரண்டு வருஷகாலம் நியமத்துடன் அனுஷ்டிக்க வேண்டிய ஒரு வேள்வியை நடத்தினர்கள். அதைத்தரிசிக்கும் பொருட்டு அத்திரி, பரத்துவாஜர், கௌதமர், வாமதேவர், குசிகர், அகஸ்தியர், வால்மீகர் வஸிஷ்

டர், விசுவாமித்திரர், தேவலர், துர்வாஸர், பராசரர், ஸூதர் முதலிய மஹான்களான பல தபோதனர்களும் அங்கு வந்திருந்தார்கள். விதிவழுவாமல் முறையே யக்ஞகர்மா முடிவு பெற்றவுடன், ஒருஸமயம் அங்குள்ள மஹரிஷிகளனைவரும் விடியற்காலத்தில் செய்ய வேண்டிய அனுஷ்டானங்களை முறைப்படி முடித்துக்கொண்டு புராணக்கடலாகிய ஸூத முனிவரை நோக்கி அடியில் வருமாறு வினவினர்கள்.

“ஹே ஸூத மஹரிஷியே, ரோமஹர்ஷணர் என்கிற பெயர்பெற்ற உம்மால் கூறப்பட்ட பல புண்யகதைகளைச் செவியேற்றுப் பரிசுத்தர்களான நாங்கள் யாகம் பூர்த்தியாகும் இச்சமயத்திலும் புண்ய கதைகளைக்கேட்பதில் விருப்பமுள்ளவர்களாக இருக்கிறோம். புத்திமான்களுக்குட் சிறந்தவரான ஹே ஸூத முனிவரே! உம்மால் இப்பொழுது ஸகல இஷ்டங்களையும் கொடுக்கும் திறமையைப் பெற்றதும் ஸகல பாபங்களையும் நாசம் செய்யக்கூடியதுமான சிறந்த புத்தி சக்திகளையுடைய மார்க்கண்டேய மஹரிஷியினுடைய சரித்திரமானது கூறப்பட்டது. இன்னும் ‘மார்க்கண்டேயர் அத்யுக்கிரமான மிருத்யுவையும் ஜயித்தார்’ என்பதும் முன்னமேயே உம்மால் சொல்லப்பட்டிருக்கிறது. புண்யகதைகளைச் சொல்லுகிறவர்களுக்குள் சிரேஷ்டராயும், எப்பொழுதும் ஸத்சரித்திரங்களை மொழிகின்றபடியால் மிகவும் ஒளி சிறந்த முகத்தையுடையவராயும் விளங்குகின்ற ஹே ரோமஹர்ஷண ஸூத புராணிக! மிருகண்டுவினுடைய புத்திரரும், சிறந்த புத்தி சக்தியுடையவருமான மார்க்கண்டேயர் தம்மிடம்வந்த மிருத்யுவை எப்பொழுது ஜயித்தார்’ என்கிற விஷயத்தை மிகவும் ரகஸ்யமாயிருந்தபோதிலும் கருணையால் தாங்கள் கூறவேண்டும். ஹே ஸூத முனியே, ஸத்யவதியின் புத்திரரான ஸ்ரீ வியாஸபகவான் ஸகல புராணங்களையும் தங்களுக்கு உபதேசித்தார் ‘அவைகளனைத்தை

யும் லோகோபகாரத்தின் பொருட்டு உலகினர்க்கு உபதே சிக்க வேண்டும்' என்று கூறித்தவத்தில் அமர்ந்தார். ஆகை யால் ஹே புண்ணியாத்மாவே, ஸகல லோகங்களுக்கும் தாங்கள் புண்யகதைகளைக் கூறவேண்டியதவசியமே. இச் சமயம் மிகவும் பக்தியுடன் வினவும் இங்கு விளங்கும் முனி வர்களிடம் கருணை கொண்டு சொல்லவேண்டும்''

இவ்வசனத்தைக்கேட்ட ஸூதரும் பின்வருமாறு கூற த்தொடங்கினர். "ஹே முனிகளே, எந்த விஷயத்தைக் கேட்ட மாத்திரத்தால் ஸகலபாபங்களும் விலகுமோ; சிறந் ததாயும், அற்புதமாயும் ரகஸ்யமாயுமுள்ள அவ்வித விஷய மானது உங்களால் நன்கு வினவப்பட்டது. என்னுல் கூறப் படும் இந்த விஷயத்தை நீங்களனைவரும் வேறு இடத்தில் மனதைச் செலுத்தாமல் சிரத்தையுடன் கேளுங்கள்"

சுவேதாரண்யமென்னும் புண்ய க்ஷேத்திரத்திற்குத் தென்பாகத்திலும், மகாஸ்மசானமென்று பெயர்பூண்ட கிழ க்கு சமுத்திரத்திற்கு மேற்கிலும், காவேரி என்ற புண்ய நதிக்கு அரையோஜனை தூரம் தெற்கிலும் ஸகல லோகங்க ளிலும் பிரஸித்தமானதும் பல மகரிஷிகளால் ஸேவிக்கப் பட்டதும்; திக்குகளை முனிவர்களுடைய வேதபாராயண சப்தங்களால் ஒலியுடன் கூடியதாகச் செய்வதும்; நைமி சாரண்யத்திற் கொப்பானதும்; இயற்கையில் சத்துரு பாவ த்தையடைந்த பூனை, எலி, அரவம், மயில் முதலிய பிராணி களும் ஒன்றுக்கொன்று ஆதரவுடன் விளையாடுகின்றதும்; ஸகலப் பிராணிகளுடைய மனதையும் கருணையுடன்கூடிய தாகச் செய்கிறதும்; அனேக விருக்ஷங்கள் நிறைந்ததும்; செடி முதலியவைகளால் சூழப்பட்டதும்; அமிர்தம்போல் சுவைபொருந்திய ஜலத்தையுடைய குளங்களுடன் விளங்கு கிறதும்; தவம் புரிவோர்களுக்குச் சீக்கிரத்தில் ஸித்தியைக்

கொடுக்கக் கூடியதுமான பில்வாடவி என்று பெயரினைக் கொண்ட மிகவும் பரிசுத்தமான ஒரு க்ஷேத்திரமானது இருக்கின்றது.

தேவர்கள் அஸுரர்கள் ஆகிய இருதிறத்தினரும் பாற் கடலைக்கடைந்து அதிலிருந்தும் உத்தமமான அமுதத்தைப் பெற்றனர். அதை ஒரு கடத்தில் பூர்ணமாக நிறைத்தனர். அந்தக் கடத்தைப் பரிசுத்தமான ஒரு ஸ்தலத்தில் வைத்து யாவரும் அருந்தவேண்டும்' எனக்கருதினர். ஆங்காங்குப் புண்ய ஸ்தலத்தைத்தேடினர். இவ்விதம் தேடுங்கால் 'பில் வாடவீ' என்கிற இந்த புண்ய க்ஷேத்திரத்தின் மகிமையை யறிந்தனர். 'இந்த இடத்திற்குச் சென்றால் ஒருவருக்கும் சத்ருபாவம் ஏற்படாது' என்றும் எண்ணினர்; தங்களால் கொண்டுவரப்பட்ட அமிர்தகடத்தை அந்த க்ஷேத்திரத்தில் ஓரிடத்தில் வைத்துவிட்டு ஸ்நானம் செய்யவேண்டித் தீர்த் தத்திற்குச் சென்றனர். சிலர் அந்த அமிர்தகடம் இருக்கு மிடத்திலேயே சிறந்ததான ஒருவேதியை நிர்மாணம்செய்து கொண்டு அதில் வீற்றிருந்தனர். ஸ்நானத்திற்குச் சென்ற வர்கள் விதிப்படி ஸ்நானத்தைச்செய்து அமிர்தத்தையுண் ணவேண்டி அங்கு வைக்கப்பட்டிருந்த அமிர்த கடத்தினு டைய பூர்வபாகத்தில் அமர்ந்து ஜபம், தியானம் முதலிய வைகளைச் செய்து கொண்டிருந்தார்கள். உத்தமமான முகூர் த்தத்தில் புண்ய க்ஷேத்திரத்தில் அந்தக் கடத்தை ஸ்தா பனம் செய்தபடியால் அந்த அமிர்தகடமானது சிறந்த லிங் காகிருதியாக ஆகிவிட்டது. அந்த லிங்கமானது பாதாளம் வரையில் தீர்க்கமாகவும் எவ்வளவு அசைத்தாலும் சலிக்கா மல் திருடமாகவும் ஆய்விட்டது. தேவர்கள், அஸுரர்கள், மற்றுமுள்ள சிறந்த முனிவர்கள் இவர்களனைவரும் ஸ்நா னம், ஜபம், தியானம் முதலிய நித்திய விதிகளை முடித்துக் கொண்டு சுத்தமான ஹிருதயத்தையுடையவர்களாய் சினே

கபர்வத்துடன் அமுதத்தை யுண்ணவேண்டி அந்தக் கடத்தின் சமீபத்தில் வந்தார்கள். உடனே எல்லாரும் ஒற்றுமையுடன் அங்கு வந்திருக்கும் மகாவிஷ்ணுவைப்பார்த்து 'இந்தக்கடத்திலிருக்கும் அமிர்தத்தைத் தாங்கள் முறைப்படி எங்களுக்குப் பரிவேஷணம் செய்யவேண்டும்' என்றுவேண்டினுர்கள். அவர்களின் வேண்டுகோளுக் கிணங்கிய அந்த பகவானும் ரத்னமயமான கரண்டியைத் தமது கையிலேந்தி முறையே அமுதத்தை எல்லாருக்கும் அளிக்கவேண்டி அங்கிருக்கும் அமுதகடத்தை எடுக்க முயன்றுர். மிகவும் பலசாலியான அந்த பகவான் அச்சமயத்தில் அந்தக்கடத்தை அசைப்பதற்குக்கூடச் சக்தியற்றவராக ஆய்விட்டார். உடனே மிகவும் ஆச்சர்யத்துடன் அங்குள்ள மற்றவர்களுக்கும் இந்த கடத்தைக் காண்பித்து "இந்த கடத்தில் உங்களால் வைக்கப்பட்ட அமிர்தமானது மேற்குத்திக்கை நோக்கியதாயும், பலரும் ஆச்சர்யப்படும்படியாயும், உத்தமமாயும் விளங்கும் லிங்காகாரமாக ஆய்விட்டது. அதுவும் ஸ்ரீ பரமேசுவரனுடைய அனுக்கிரகத்தாலேயேயன்றிப் பிறரால் ஆகவில்லை" என்று கூறினுர். உடனே அங்குள்ள தேவாஸுரர்களனைவரும் மிகவும் சிறந்ததான அந்த அமுதலிங்கத்தை அதிக பக்தியுடன் நமஸ்கரித்து "இந்த பில்வாடவியின் மத்தியில் இந்த லிங்கமானது இருக்க வேண்டியது. இதை வேறுவிதம் செய்ய முடியாது" என்று சொன்ன ஸ்ரீ ஹரியை மிகவும் அன்புடன்பார்த்து இங்குநேர்ந்த இந்த ஆச்சர்யத்தை மறுபடியும் நன்கு தரிசித்து அமுதத்தை யுண்ண வேண்டுமென்ற தங்களது ஸங்கற்பத்தை விட்டவர்களாய் அங்கிருந்தும் அவரவர்களும் தங்கள் தங்களது இருப்பிடத்திற்குச் சென்றுர்கள். அப்பால் அந்த அமிர்த கடத்தின் மத்தியிலுண்டான அந்த லிங்கத்திற்கு ஹேத்விஜர்களே, அமிர்த கும்பேசுவரர் என்று மிகவும் பிரசித்தி

பெற்ற திருநாமம் ஏற்பட்டது. இவ்விதம் பிரசித்தி வாய்ந்ததும் ஸகல பாபங்களையும் அகற்றுகின்றதும் மிகவும் மகிமை பொருந்தியதுமான அமிர்தகடேசுவரர் என்ற இந்த லிங்கத்தால் விளங்கும் இந்த பில்வாடவி க்ஷேத்திரத்தை எந்தப்பிராணிகள் அடைந்து இந்த லிங்கக்தைத்தரிசனம் செய்கின்றனவோ அவையாவும் முக்திபெறுகின்றன. அந்த க்ஷேத்திரத்தில் வஸிக்கும் ஜனங்களுக்கு முக்தி என்பது நிச்சயம். ஒரு ஸமயம் ஸ்ரீ மகாவிஷ்ணுவானவர் உலகத்தைப்பாதுகாக்க வேண்டியதற்காக மிகவும் பாவனமான பில்வாரண்யம் என்ற இந்த க்ஷேத்திரத்தில் "அமிர்த பத்மினி" என்று பெயர்பெற்ற புண்ய தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து பிறரால் அனுஷ்டிக்கமுடியாத மிகவும் கொடூரமான தவத்தைச் செய்தார். அந்த ஸமயத்தில் விசேஷ பக்தியுடன் கூடியவரும் ஜிதேந்திரியருமான ஸ்ரீ ஹரியானவர் அமிர்த கடத்திலிருந்தும் ஆவிர்ப்பவித்த ஸ்ரீ பரமேசுவரனை சுத்தமான பில்வபத்திரங்களால் சிவனுடைய ஸஹஸ்ர நாமங்களையும் சொல்லி முக்காலங்களிலும் அர்ச்சிக்கிறவராகிப் பதினுயிரம் வருஷகாலம் இந்த க்ஷேத்திரத்திலேயே தவத்திலமர்ந்தார். பிறகு இவருடைய கடுந்தவத்தால் பிரஸன்னராகி அமிர்தகடத்திலிருந்து ஆவிர்ப்பவித்தவரான ஸ்ரீ பரமேசுவரன் அங்குத் தவம்புரியும் அதிகமான தேஜஸ்ஸையுடைய மகாவிஷ்ணுவிற்குப் பிரத்தியக்ஷமாகத் தோன்றினர். கைலாஸபர்வதத்திற்கொப்பான ஒளியையுடைய தமதுவாகனமான விருஷபத்தில் ஏறிக்கொண்டு வந்தவராயும், மூன்று நேத்திரங்களை தரித்தவராயும் மூவுலகங்களுக்கும் அதிபதியாயும், பக்தர்களின் இஷ்டத்தைப்பூர்த்தி செய்கின்றவராயும், பார்வதீ என்னும் தம் தர்மபத்னி தமது குமாரனை குமரன் மற்றுமுள்ள நந்தி முலான கணங்கள் இவர்களுடன் கூடினவராயும், ஸர்வேசுவராயுமிருக்கும் அந்தச்

சந்திரசேகரரானவர் அதிகமான கருணைகொண்டு யோகாஸனத்திலிருக்கும் ஸ்ரீ மகாவிஷ்ணுவைபார்த்தார். நான்வரத்தைக்கொடுக்கவேண்டி வந்திருக்கிறேன்' என்று சொல்லிக்கொண்டு அவருடைய சிரஸில் தொட்டார். உடனே, கண்கள் விழிக்க ஸமாதியிலிருந்து நிவர்த்தியடைந்த ஸ்ரீ வைகுண்டவாஸியான பிரபுவானவர் நடனபதியாயும், நித்தியராயும் விளங்கும் அந்த மஹேசுவரரைப்பார்த்து அதிக ஸந்தோஷத்துடன் விதிவழுவாமல் ஸாஷ்டாங்கமாகத் தண்டம் போல் பூமியில் வீழ்ந்து நமஸ்கரித்தார். உடனே எழுந்திருந்து கண்களில் ஆனந்தக்கண்ணீர் பெருக மயிர்க்குச்செறிய தமது தேவியான பார்வதியுடன் கூடியவரும் ஸம்ஸாரபந்தத்தைச் சேதிப்பவருமான ஸ்ரீ மஹேசுவரரை மிகவும் பக்தியால் போற்றினர். இவருடைய ஸ்தோத்திர வசனங்களைச் செவியுற்றவரும், தவத்தால் மிகவும் சந்தோஷத்தையடைந்தவருமான ஸ்ரீ பரமேசுவரன் உமக்கு இஷ்டமான வரத்தைக்கேளும் என்று சொன்னர்.

இவ்வசனத்தைக்கேட்ட விஷ்ணுவும் சந்தோஷங்கொண்டு அடியில்வரும் தமக்கு இஷ்டமானவரத்தைக் கேட்டுக்கொண்டார். "ஹே பிரபோ, அஸுரர்களை நாசம் செய்ய வேண்டி எனக்கு வரன் கொடுக்கவேண்டும். தங்களுடைய அனுக்கிரகத்தால் விசேஷமான பலத்தைப்பெற்று அவர்களை ஜயிக்கப்போகின்றேன், தாநவர்கள் மாயையால் மறைந்திருப்பவர்கள், ஹே சங்கர அவர்களைஜயிப்பதற்குற்ற பலத்தைத் தாங்கள் எனக்குக் கொடுக்கவேண்டும்" இவ்விதம் விஷ்ணுவால் கூறப்பட்ட கருணைக்கடலான ஹரரானவர் பிரஸந்நராயிருந்துகொண்டு "தாநவர்களை வதம்பண்ணுகிறதற்கு யோக்கியமான பலத்தை நீர் அடையும்" என்று விஷ்ணுவைக்குறித்து அவர் விரும்பியபடியே 'வரத்தையளித்தார். ஸ்ரீ பரமேசுவரனுல் அன்புடன் அனுக்கிரகிக்கப்பட்ட வரத்

தைப்பெற்ற நாராயணரும் உடனே துஷ்டர்களான அஸுரர்களை யுத்தத்தில்ஜயித்து ஸகல லோகங்களுக்கும் க்ஷேமத்தையுண்டுபண்ணினர். சம்புவினுடைய அனுக்கிரகத்தால் ஸமஸ்த தேவதைகளும் ஸுகமாயிருந்தார்கள். வியாஸர் முதலான முனிசிரேஷ்டர்களும் கபிலர்முதலிய யோகிகளும் அமிருதஸ்வரூபமான அந்த லிங்கத்தைத்தரிசித்து ஸம்ஸார பந்தத்திலிருந்தும் விடுபட்டார்கள்.

முந்தி பில்வ வனத்திலிருந்தவர்களும் விசேஷபாக்யம் பெற்றவர்களுமான வாலகில்லியாதி மஹரிஷிகளானவர்கள் வேதாந்த சாஸ்திரத்தில் விசேஷமான ஞானவலிமையைப் பெற்றூர்கள். பின்னும் இந்தப் பில்வவனத்தில் மஹான்களான இந்த மஹருஷிகளால் உண்டுபண்ணப்பட்ட சிறந்த புண்யதீர்த்தங்களும் இருக்கின்றன. அந்தத் தீர்த்தங்களைத் தரிசனம் செய்தமாத்திரத்தால் ஜனங்கள் முக்தியைப் பெறுகிறூர்களென்றுல், அவைகளில் ஸ்நானம் செய்தவர்களுக்கு யாது பயன் ஏற்படுமென்பதைக் கூறவும் வேண்டுமோ? வாலகில்ய என்றுபெயர்பூண்ட புண்யதீர்த்தத்தில்இப்புவியிலுள்ள மனிதர்களில் எவர்கள் அமாவாஸை, பௌர்ணிமை, பானுவாரம், கிருத்திகா நக்ஷத்திரத்துடன்கூடிய தினம் இந்தப் புண்யகாலங்களில் ஸ்நானம் செய்கின்றூர்களோ, அவர்களுக்கு ஈசுவரப் பிரஸாதத்தால் உடனே முக்தி ஏற்படுகின்றது. சித்திரைமாதத்தில் சித்திரா நக்ஷத்திரத்தோடு கூடிய தினத்தில் மத்தியான்னத்தில் அபிஜித் முகூர்த்தத்தில் எவர்கள் விசேஷபக்தியுடன் இந்தமஹேசுவரனைத்தரிசிக்கின்றூர்களோ; பின்னும் ஏபிராம்மணர்களே, இவ்வித புண்யகாலத்திலேயே அமிருத கும்பத்திலிருந்தும் உத்தமமான இந்த அமிர்தலிங்கமானது உண்டாயிருக்கிறது. ஆகையால் மிகவும் புண்யகாலமான அந்தத்தினத்தில் அமிர்தகுண்டமெனப் பெயர்வாய்ந்த புண்யதீர்த்தத்தில் ஸ்நானம்செய்து அறுகம்

ஹைத்தப்பெற்ற நாராயணரும் உடனே துஷ்டர்களான அஸுரர்களை யுத்தத்தில்ஜயித்து ஸகல லோகங்களுக்கும் க்ஷேமத்தையுண்டுபண்ணினர். சம்புவினுடைய அனுக்கிரகத்தால் ஸமஸ்த தேவதைகளும் ஸுகமாயிருந்தார்கள். வியாஸர் முதலான முனிசிரேஷ்டர்களும் கபிலர்முதலிய யோகிகளும் அமிருதஸ்வரூபமான அந்த லிங்கத்தைத்தரிசித்து ஸம்ஸார பந்தத்திலிருந்தும் விடுபட்டார்கள்.

முந்தி பில்வ வனத்திலிருந்தவர்களும் விசேஷபாக்யம் பெற்றவர்களுமான வாலகில்லியாதி மஹரிஷிகளானவர்கள் வேதாந்த சாஸ்திரத்தில் விசேஷமான ஞானவலிமையைப் பெற்றூர்கள். பின்னும் இந்தப் பில்வவனத்தில் மஹான்களான இந்த மஹருஷிகளால் உண்டுபண்ணப்பட்ட சிறந்த புண்யதீர்த்தங்களும் இருக்கின்றன. அந்தத் தீர்த்தங்களைத் தரிசனம் செய்தமாத்திரத்தால் ஜனங்கள் முக்தியைப் பெறுகிறூர்களென்றூல், அவைகளில் ஸ்நானம் செய்தவர்களுக்கு யாது பயன் ஏற்படுமென்பதைக் கூறவும் வேண்டுமோ? வாலகில்ய என்றுபெயர்பூண்ட புண்யதீர்த்தத்தில்இப்புவியிலுள்ள மனிதர்களில் எவர்கள் அமாவாஸை, பௌர்ணிமை, பானுவாரம், கிருத்திகா நக்ஷத்திரத்துடன்கூடிய தினம் இந்தப் புண்யகாலங்களில் ஸ்நானம் செய்கின்றூர்களோ, அவர்களுக்கு ஈசுவரப் பிரஸாதத்தால் உடனே முக்தி ஏற்படுகின்றது. சித்திரைமாதத்தில் சித்திரா நக்ஷத்திரத்தோடு கூடிய தினத்தில் மத்தியான்னத்தில் அபிஜித் முகூர்த்தத்தில் எவர்கள் விசேஷபக்தியுடன் இந்தமஹேசுவரனைத்தரிசிக்கின்றூர்களோ; பின்னும் ஏபிராம்மணர்களே, இவ்வித புண்யகாலத்திலேயே அமிருத கும்பத்திலிருந்தும் உத்தமமான இந்த அமிர்தலிங்கமானது உண்டாயிருக்கிறது. ஆகையால் மிகவும் புண்யகாலமான அந்தத்தினத்தில் அமிர்தகுண்டமெனப் பெயர்வாய்ந்த புண்யதீர்த்தத்தில் ஸ்நானம்செய்து அறுகம்

புல், அக்ஷதம், திலம் இவைகளோடுகூட "ஆபோவா" என்ற மந்திரத்தை மூன்றுதடவை ஜபித்துத் தொடையளவுள்ள ஜலத்தில் இருந்துகொண்டு கிழக்குமுகமாகத் தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து, ருஷிகளுக்கும் தேவதைகளுக்கும் தர்ப்பணஞ்செய்து, பிராம்மணோத்தமர்களிடம் அனுக்ஞை பெற்றுத் தமது சக்திக்கியன்றவாறு பசு, பூமி; திலம்; சுவர்ணம் முதலான தானங்களைச் செய்து, தண்டபாணி க்ஷேத்திரபாலர் இவர்களை நமஸ்காரஞ்செய்து, அபிராமீசுவாரையும் அடிபணிந்து பிறகு பில்வாரண்யாதிபதியாயும், வியாபகராயும் விளங்கும் அமிருதகடேசுவரரை எவர்கள் தரிசிக்கின்றார்களோ; இவர்கள் யாவரும் ஸகல பாபங்களிலிருந்தும் விடுபட்டு இவ்வுலகில் சிறந்த பூர்ணமான பல போகங்களை அனுபவித்து முடிவில் சிவப் பிரஸாதத்தால் உத்தமமான கதியையடைந்து ஸ்ரீ பரமேசுவரரூபமாக ஆகின்றார்கள். கிருத்திகாமாதத்தில் பானுவாரத்தில் சூர்யோதயத்திற்கு முன் கிழக்குமுகமாக நின்றுகொண்டு "ஸவிதுஷ்ட" என்ற மந்திரத்தால் மூன்றுதடவை ஸ்நானஞ்செய்து ஏகாக்கிரசித்தனாய் இருந்துகொண்டு ஐந்துதடவை ஜபித்து, மறுபடியும் மூன்றுதடவை மந்திரத்தைஉச்சரித்து சூர்யபகவானைப் போற்றிப் புண்யதீர்த்தத்தோடுகூடிய அமிருதகடத்திலிருந்துண்டான பரமேசுவரனை மூன்றுதடவை பிரதக்ஷிணஞ்செய்து தண்டம்போல் பூமியில்விழுந்து பிரணாமஞ்செய்தால் உடனே பிரும்மஹத்திசெய்தவனாயிருந்தபோதிலும் அவன் அந்தப் பாபத்திலிருந்தும் விடுபடுகிறான். பிறர் பொருளை அபகரித்தவன், குருதல்பத்தை அடைந்தவன் முதலியவர்களும் அந்தந்தப் பாபத்திலிருந்தும் விடுபடுகிறார்கள். ஒரு தடவை விதிப்படி இந்தப் புண்யதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து பில்வ வனத்திலிருக்கும் அமிர்தகடேசுவரரைத் தரிசிப்பதால் இவ்விதபலம் ஏற்படுகிறதென்று சொல்லப்

பட்டிருக்கின்றது. கிருத்திகாமாதத்தில் பானுவாரத்தில் ஸ்நானம் தரிசனம் முதலியவைகளைச் செய்வோர்களுக்கும் இவ்வித பலமே கூறப்படுகின்றது.

வ்யதீபாதம் முதலிய புண்யகாலங்களிலும், சந்திர கிரஹணம், சூரியகிரஹணம் ஆகிய ஸமயங்களிலும், மாதா பிதாக்கள் மரணத்தையடைந்த தினத்திலும் ஹே பிராம் மணர்களே, 'அமிருதாப்ஜினீ' என்கிற இந்தப் புண்யதீர்த்தத் தில் பாபங்களிலிருந்தும் பயந்தஜனங்கள் ஸ்நானம்செய்தார் களாகில் குஷ்டரோகம் வரக்கூடிய தோஷம், நன்றிசெய்த வனுக்குத் தீங்கிழைத்ததால் நேரும் பாபம், மற்றுமுள்ள பாபங்கள், இவைகளிலிருந்தும் விடுபடுகிறார்கள். மேலும், சிவனுக்குத்துரோகம் செய்வதாலும், சிவஸொத்தைப்புஜிப் பதாலும் உண்டான பாபத்தைத்தவிர மற்ற எல்லாப்பாபங் களும் நசித்துவிடும். சிவாபராதிகளுக்குப் பூலோகத்தில் பரிகாரம் கிடையாது. ஆகையால் எல்லா ஜனங்களும் சிவாபராதத்தைச் செய்யக்கூடாதென்று எப்பொழுதும் பயத்துடனிருக்கவேண்டும். ஹே மகருஷிகளே, அமிரு தேசுவரருடைய மாஹாத்மியத்தைத் தேவர்கள் அறிவார் களேயன்றி மனிதர்கள் அறியமாட்டார்கள். நானும் என் ஆசார்யரால் கூறப்பட்டதை இதுவரையில் உங்களுக்குப் போதித்தேனேயன்றி ஸ்வயமாய் அறிந்துகொள்ளவில்லை. இதற்குமேல் போதிக்கவேண்டிய அவசியமில்லையாகையால் இதைக் கொண்டே நீங்கள் சங்கைகொள்ளாமல் இந்த க்ஷேத்திரத்தின் மகிமையை நன்கு அறிந்துகொள்ளலாம்.

अध्यायमेतत् पठतां नराणां न मृत्युभीतिर्भवतीह किञ्चित् ।
संशृण्वतां भक्तिमतांच लोके सुधाघटेशस्सकलं ददाति ॥

இவ்விதம் பில்வாரண்யக்ஷேத்திரத்தின் பெருமையை விளங் கிக்காட்டும் இந்த அத்தியாயத்தைப் படிப்போர்களுக்கு

யமனிடத்திலிருந்தும் அற்பங்கூட பயமே உண்டாகாது. உலகில், பக்தியுடன் இதைச் செவியுறுவோருக்கு அமிர்த கடேசுவரர், விரும்பிய ஸகல போகங்களையும் அளிக்கிறார்' என்று நிரூபித்து அத்தியாயத்தையும் பூர்த்திசெய்தார்.

ஸ்காந்தத்திலுள்ள ஸப்தாரண்யப் பிரசம்ஸையிலிருக்கும்
பில்வாரண்ய மாஹாத்மியம் எனப் பெயர்வாந்த
160வது அத்தியாயம் முடிவுபெற்றது. சுபம்.

---

## அத்தியாயம் 2.

மறுபடியும்ஸூதபுராணிகர்கூறத்தொடங்கினார்ஹேமக ருஷிகளே ! இந்தக்ஷேத்திரவிஷயமாய் ஸகல பாபங்களையும் அறவேயொழிக்கின்றதும், சிரவணம் செய்வோர்களுக்கு ஆயுளையும் சிவபக்தியையும் விசேஷமாய் விருத்திசெய்கிற துமான முற்காலத்தில் நடைபெற்ற ஓர் இதிகாஸத்தைக் கூறுகின்றார்கள். அதையும் உங்களுக்குச் செப்புகின்றேன். சிரத்தையாய் கேட்கவேண்டும்.

விசாலை என்று பெயர்கொண்ட ஒருநகரில் ரத்நாகரன் என்கிற மிகவும் தார்மிகனான ஒரு வைச்யன் இருந்தான். அவன் ஐசுவர்யத்தில் குபேரனுக்கொப்பானவன். தனக்குற்ற சாஸ்திரீயமான கர்மானுஷ்டானங்களை ஒவ்வொரு தினமும் விதிவழுவாது நடத்திப் பிறகு தனது ஜாதிக்கேற்பட்ட வியாபாரமுறைகளில் அதிகப் பற்றுதலுடையவனாக இருந்தான். பின்னும் அந்த வைசியன் வைதிகாசாரங்களில் சிரத்தையுள்ளவனாகவும், எப்பொழுதும் தேவதைகள், பிராம்மணர்கள், அக்னி, ஸந்யாஸி, அதிதி முதலானவர்களைப்

பூஜை செய்பவனாகவும், பரஸ்திரீ என்கிற வார்த்தையைக் கூட உச்சரிக்காதவனாகவும், சாஸ்திரீயமாய் ஏற்பட்ட தனது பத்நியிடம் பிரியமுள்ளவனாகவும் இருந்துகொண்டு, தான்யங்கள், காய்கிழங்குகள், தயிர், பால், வெல்லம், நெய் உப்பு மற்றுமுள்ள திப்பிலி மிளகு ஜீரகம் சுக்கு அரத்தை முதலான (மத்யம் ஒன்றைத்தவிர்த்து) சகலசாமான்களையும் கபடமின்றிச் சுத்தமான எண்ணத்துடன் எல்லாவிடங்களி லும் வியாபாரம் செய்துவந்தான். வியாபாரமுறையிலிருந் தாலும் ஆகாரம் வியவகாரம் முதலான கார்யங்களைச்சுருக்க மாய் நடத்திவந்தான். ஒருவரிடமும் அநாவசியமாகவும் அதிகமாகவும் அவன் பேசுவதில்லை. இவ்விதம் இருந்து வரும் அந்த ரத்நாகரனுக்கு முற்பிறவியிற் செய்யப்பட்ட புண்யகர்மத்தினால், ஸம்ஸாரமென்பது மிகவும் துச்சம் என தோன்றி அதை விலக்கவேண்டுமென்கிற தீவ்ரமான புத்தி உண்டாயிற்று. அந்தஸமயம் அவருக்குத் தோன்றின வை வருமாறு– “உலகில் புமான்களுக்கு ஸம்ஸாரத்தில் பிரியம் ஏற்பட்டு அதில் கிரீடிக்கிறார்களே என்கிற இந்த அஜ்ஞா னத்தைப்பார்க்க மிகவும் ஆச்சரியமாயிருக்கின்றது. மோஹ மென்னும் கயிறுரூபமாய் விளங்கும் சங்கருடைய இந்த மாயையானது ஒருவராலும் ஜயிக்கமுடியாதது. அநாதியாய் ஏற்பட்டிருக்கின்றது. சகல சௌக்கியங்களையும் நாசம் செய்கின்றது. இவ்விதமிருக்கும் மாயையால், எவர்கள் விடப்பட்டிருக்கின்றார்களோ அம்மஹான்களால் இந்த ஜகத்து நிலைபெற்றிருக்கின்றது. அந்த மாயையை இப் பொழுது நானும் ஜயிக்கவேண்டும்” என்பன. பின்னர் அவன் ‘எப்படி அதை ஜயிக்கப்போகின்றேன்’ என்று கவலை கொண்டு வெகுகாலம் வரையில் இதற்குவேண்டிய விசாரங் களைச் செய்துவந்தான். இவ்விதம் விசாரிக்குங்கால் ஒரு சமயம் அந்த வைச்யனுக்குத் தன்னால் ஸம்பாதிக்கப்பட்ட

பொருள் முதலிய யாவும் அநித்யமென்றும், உபயோகமற்றவைகளென்றும் புத்தியில் தோன்றிவிட்டது. உடனே திருடமான வைராக்கியமேற்படத் தன்னுடைய பொருட்களை நல்வழிகளில் செலவுசெய்யவேணுமென்று தோன்றிற்று. அந்தக்ஷணமே விதிப்படி நொண்டி, குருடு, செவிடு ஏழை, வேதியர், வித்வான் முதலானவர்களுக்குப் பணமாகவும், சிறந்த வஸ்திரங்களாகவும், பசுக்களாகவும், தான்யங்களாகவும், எவரெவர் எதையெதை விரும்புகிறார்களோ அதை அவரவர்களின் விருப்பத்திற்கு அதிகமாக வர்ஷித்துப் பாக்கியிருக்கும் பொருளையும் எக்ஞம் முதலான தர்மங்களுக்கு அர்ப்பணம் செய்தான். இவ்விதம் தன்னால் ஸம்பாதிக்கப்பட்ட லக்ஷக்கணக்கான அளவிறந்த ஸொத்தை விநியோகஞ்செய்துவிட்டான். பிறகு 'ஜகத்துப் பொய் ஆத்ம வஸ்துவே ஸத்யம்' என்கிற தத்வத்தை யறிந்த ஸவஜ்ஞான அந்த வைசியன் பேதபுத்தியை விட்டு எல்லாவற்றையும் ஒன்றுகக் கருதி தீர்த்தயாத்திரை என்கிற வியாஜம்கொண்டு பூமியில் பலவிடங்களிலும் ஸஞ்சாரஞ்செய்ய ஆரம்பித்தார்.

தம் கிருகத்தைவிட்டுத் தீர்த்தயாத்திரைக்காகக் கிளம்பிய அந்த வைசியர் ஜம்பூத்வீபத்தில் வெகுகாலம் ஸஞ்சாரஞ்செய்து பிறகு எவ்விதமான கர்மாக்களை அனுஷ்டித்தாலும் சீக்கிரம் பலத்தைக் கொடுக்கும் சக்திவாய்ந்ததும், மனத்திற்கு அதிக சுத்தியைக்கொடுப்பதுமான பாரதவர்ஷத்தில் சென்று: மிகவும்பக்தியுடன் ஆங்காங்குள்ள புண்ய தீர்த்தங்களையும், புண்யக்ஷேத்திரங்களையும் நன்குஸேவித்தார்; பிறகு ஹிங்குளம், நகுளம், நாகபாசம், பாராவதம், கோமதி, கோகர்ணம், ஹரிசங்காம், கக்ஷீந்திரம், பிப்பலாத்திரி, சூலாத்திரி, மிக்வும் பாவனமான விருஷாசலம், வேதநதம், பாசதீர்த்தம் முதலிய க்ஷேத்திரங்களையும், தீர்த்தங்களையும் முறையே விதிப்படி ஸேவித்தார். அதற்குப் பிறகு

புண்யமான தீர்த்தத்தோடு விளங்கும் காவிரிநதியையடைந்து சாஸ்திரவிதிப்படி அதில் ஸ்நானம் முதலியவை செய்தார். அங்கிருந்தும் ஸமுத்திரதீரத்திலுள்ள மஹமயானஸ்தலம் வந்து பகவத் ஸங்கற்பத்தால் எதேச்சையாக “பில்வாடவி” என்ற இந்த உத்தமமான க்ஷேத்திரத்தையடைந்தார். அங்கு வந்தமாத்திரத்திலேயே விசேஷமான ஸந்தோஷத்தையடைந்த அந்த வைசியர் ஸுதாகடேசுவரரான மஹாதேவரைத் தரிசித்துப் புளகாங்கித சரீரத்துடன் கூடியவராய் ஸ்நானம் முதலிய அநுஷ்டானங்களைச் செய்யவேண்டித் தீர்த்தத்தைத் தேடிச்சென்றார். அங்கு ஸமீபத்தில் “ஸுதா புஷ்கரணீ” என்ற புண்யதீர்த்தத்தைக் கண்டு அதில் ஸ்நானம் முதலிய அநுஷ்டானங்களைச் செய்துகொண்டு, ச்யவனமஹருஷியால் செய்யப்பட்ட உபதேசத்தையும் பெற்றார். பிறகு ஸர்வாபரண அலங்கிருதராயும், அமிர்தகும்பேசுவரர் என்ற திருநாமம் பூண்டவருமான ஸ்ரீ பரமேசுவரனையும், அபிராமீசுவரி என்கிற ஸ்ரீ பராசக்தியையும், மற்றுமுள்ள துவாரபாலகர்களையும் முறையே மூன்று பிரதக்ஷிணங்களையும் மூன்று நமஸ்காரங்களையும் செய்து அந்த அமிர்தகடேசுவரருடைய ஸந்நிதியில் வேதஸாரம் என்றும், சிவமென்றும் பெயர்பெற்ற சிறந்த ஸ்ரீபஞ்சாக்ஷர மந்திரத்தை ஜபித்துக்கொண்டு மூன்று தினங்கள் வரையில் தியானயோகத்திலிருந்தார்.

அந்த க்ஷேத்திரத்திலேயே கொஞ்சகாலம் அந்தவைசியர் ஸுதாகுண்டமென்கிற புண்யதீர்த்தத்தில் மூன்று காலங்களிலும் ஸ்நானம் செய்துகொண்டும், எப்பொழுதும் அதிக பக்தியுடன் அமிர்தகடேசுவரரான ஸ்ரீ சிவபெருமானுடைய திருநாமங்களை ஜபித்துக்கொண்டும் இருக்கும் பொழுது முன்செய்த புண்யவசத்தால் மரணத்தையடைந்தார். அதே ஸமயத்தில் பகவதாக்ஞையால் அந்த க்ஷேத்

திரத்தினுடைய வனத்தில் ஒரு வேடனால் அர்த்தசந்திர பாணத்தைக்கொண்டு வயிற்றில் நன்கு அடிபட்ட ஒரு புலியும் மரித்தது. ஹே த்விஜர்களே, ஒரேஸமயத்தில் இந்தப் புண்யக்ஷேத்திரத்தில் மரித்த இருவர்களும், அந்தக்ஷணமே ஸமானமான திவ்யசரீரத்தை யடைந்தார்கள். எந்த இடத்திற்குச் சென்றால், சிறந்த அலங்காரங்களால் விளங்குகின்ற (அலங்கரிக்கப்பட்ட) வர்களாகவும், மூன்று நேத்திரங்களுடன் கூடினவர்களாகவும், வியாக்கிர சர்மாவைத் தரித்தவர்களாகவும், விருஷபாரூடர்களாகவும் இருந்துகொண்டு அற்பங்கூட துக்கமின்றி எப்பொழுதும் ஆனந்தத்தையனுபவிக்கலாமோ, அத்தகைய மகிமைபொருந்திய அவ்வுத்தம ஸ்தானத்தை அடைந்தார்கள். ஸ்ரீ பரமேசுவரனுடைய ஸாரூப்யத்தைப் பெற்று சுகித்திருந்தார்கள். பில்வாடவீ என்ற இந்த க்ஷேத்திரத்திற்கு இருக்கும் மகிமையானது வேறு எந்த க்ஷேத்திரத்திற்கும் கிடையாது. ஜலம், அக்னி, ரோகம், விஷம் இவைகளால் பீடிக்கப்பட்டவர்களும், ரஜ்ஜுபந்தனத்தாலும் சத்ருக்களின் ஹிம்ஸையாலும் மரணத்தையடைந்தவர்களும், பசு, பக்ஷி, மிருகம் முதலியவைகளும் கொசு, ஈ, எறும்பு முதலியவைகளும், இந்த க்ஷேத்திதில் மரணத்தை அடைந்தால் சிவஸாயுஜ்பத்தைப் பெற்று ஸ்ரீபரமேசுவரனிடத்திலேயே லயத்தையடையலாம். இந்த க்ஷேத்திரத்தில் விளங்கும் அமிர்தகடேசுவரர், பாபி, புண்யசாலி, யோக்கியன், அயோக்கியன் என்று வேற்றுமை பாராட்டாமல் ஸகல ஜனங்களுக்கும் என்றும் அறிவில்லாத சாச்வதமான ஸ்தானத்தைக் கொடுக்கிறார். இந்த க்ஷேத்திரத்தில் மரணத்தை அடையும் ஸகலப் பிராணிகளுக்கும் மோக்ஷமென்பது நிச்சயமாயுண்டு. பாபத்தில் பயந்தவர்களான எவர்கள் ஸம்ஸாரபந்தத்திலிருந்தும் மோக்ஷத்தை விரும்புகிறார்களோ அவர்கள் தமது மரணகாலபர்யந்தம்

இந்த க்ஷேத்திரத்திலேயே வசிப்பார்களேயாகில் இஷ்ட சித்தியைப் பெறலாம். இந்த க்ஷேத்திரத்தில் பசியால் வருந்தும் அதிதிகளுக்கும், ஸந்யாஸிகளுக்கும் போஜனம் தீர்த்தம் முதலியவைகளைப் பக்தியுடன் எவர்கள் கொடுக்கின்றார்களோ அவர்கள் ஸ்ரீபரமேசுவரனுக்கு வாஸஸ்தானமான கைலாஸத்தில் அனேக ஆயிரவருஷங்கள் சுகமாய் வசித்துப் பிறகு மிகவும் சிறந்த வேதியர்குலத்தில் ஜன்மாவைப்பெற்று வேதம், வேதாந்தம் முதலிய நூல்களில் விசேஷமான ஞானத்தைபுடையவர்களாயும், ஜிதேந்த்ரியர்களாயும், ஸத்யவான்களாயும், 'எப்பொழுதும் சிவபூஜையில் பற்றுதலுள்ளவர்களாயும் இருந்துகொண்டு, இவ்வுலகிலுள்ள ஸகலமான போகங்களையும் பூர்ணமாகஅனுபவித்து, புத்திர பௌத்திராதி பாக்கியங்களையும்அடைந்து அப்பால் ஜீவன் முக்தர்களாக ஆகிறார்கள். பின்னும் இந்த க்ஷேத்திரத்தில் க்ரீஷ்மருது, ஹேமந்தருது இந்தக் காலங்களில் ஸாதுக்களுக்குத் தீர்த்தம், வஸ்திரம், தாம்பூலம், தனம், திலம், நெய், கம்பளம் முதலியவைகளை அமிர்தபுஷ்காணீ என்கிற புண்யதீர்த்தத்தின் வடகரையில்விளங்கும் பார்க்கவருடைய ஆச்ரமத்திலிருக்கும் பில்வவிருக்ஷத்தின் மூலத்தில் எவர்கள் கொடுக்கிறார்களோ, மிகுந்த பாக்கியசாலிகளான அவர்கள் மகேசுவரனுடைய ஸ்தானமான கைலாஸத்தை அடைகிறார்கள். இது நிச்சயம். கிருஷ்ணாங்கார சதுர்த்தசி திதியில் விடியற்காலத்தில் நித்தியம் நைமித்திகம் முதலான தம்முடைய கர்மானுஷ்டானங்களை முடித்துச் சுத்தர்களாய் இருந்து கொண்டு சிரத்தையுடன் மத்தியான்னகாலத்தில் 'அமிர்தாப்ஜினீ' என்கிற புண்யதீர்த்தத்தில் தெற்கு முகமாக நாபியளவு ஜலத்திலிருந்து கொண்டு "யமபங்கி" என்கிற மந்திரத்தை யுச்சரித்துப் பிறகு அகோர மந்திரத்தையும் ஜபித்து மூன்று தடவை ஸ்நானம்செய்து திலம், அக்ஷதம் முதலியவைகளால் தர்ப்பணத்தையும்செய்து அதற்குப்

பிறகு எமனுக்குத் திருப்தியின் பொருட்டு உளுந்தன்னத்தால் பலியையும் எவர்கள் ஒரு தடவையாவது கொடுக்கிறார்களோ அவர்கள் ஸகல பாபங்களிலிருந்தும் விடுபட்டு இந்தப் புண்யகர்மாவால் யமலோகத்தை யடையமாட்டார்கள். அவர்களுக்குச் சூர்யன், சந்திரன் இவர்களுள்ள வரையிலும் வம்சத்தில் சிறந்த புத்திரர்களின் அபிவிருத்தியும் ஏற்படும்.

முன் ஒரு ஸமயம் மிருகண்டுமகரிஷியின் புத்திரன் அமிர்தகடேசுவரரான ஸ்ரீ பரமேசுவரனை இந்தப் பில்வவன க்ஷேத்திரத்தில் ஆராதித்துத் தேவ பாவத்தைப் பெற்றான். ஆகையால் இந்த க்ஷேத்திரத்தினுடைய மகிமையை என்னாலோ மற்றுமுலகத்தில் வசிப்பவர்களாலோ எப்படிக்கூற முடியும்! இந்தச்சிவ க்ஷேத்திரத்தில் வசிக்கின்ற ஸகலப் பிராணிகளுக்கும் ஹே ரிஷிகளே! ஸ்ரீ அமுர்தகடேசுவரான சிவ பிரானானவர் எப்பொழுதும் ஸ்திரமாயிருக்கக் கூடிய தமது ஸாயுஜ்யத்தையளிக்கிறார்.

**अहो विचित्रं कलिकल्मषघ्नमाख्यानमेतच्छिवभक्तिसारम् ।**
**संशृण्वतां पापविनाशनं च बिल्वाटवीशस्य चरित्रमेतत् ॥**

"ஹே ரிஷிகளே! கலிதோஷங்களை யடியோடகற்றுகின்றதும், சிவபக்தியின் ஸாரபூதமானதும், மிகவும் ஆச்சர்யகரமாயிருக்கின்றதுமான பில்வாடவீசரான ஸ்ரீ பகவானுடைய கதாரூபமான சிறந்த இந்தச் சரித்திரமானது சிரத்தையுடன் கேட்போர்களுடைய பாபங்களைப் போக்கும் சக்திவாய்ந்தது" என்று கூறி அத்யாயத்தையும் முடித்தார்.

இவ்விதம் ஸ்காந்தமென்கிற மகாபுராணத்தில் ஸப்தாரண்ய ப்ரசம்ஸையில் பில்வாரண்ய மகாத்மிய மென்கிற
161 ஆவது அத்தியாயம் முடிவுபெற்றது. சுபம்.

---

## அத்தியாயம். 3.



மறுபடியும் ஸூதமகரிஷி கூறுகின்றார். "ரிஷ்யசிருங்க மகரிஷிக்குப் பிரசித்தான மிருகண்டு என்ற ஒரு புத்திரர் இருந்தார். தர்மத்தில் சிரத்தையுள்ளவராயும், பல புண்ய கர்மங்களை அனுஷ்டித்தவராயுமிருக்கிற அந்த மிருகண்டு மகரிஷியானவர் தம்முடைய அன்னையர்களோடு கூடப் புண்யபூமியான காசி க்ஷேத்திரத்தையடைந்தார். அந்த க்ஷேத்திரத்தில் ஒரு வருஷகாலம் வசித்துத் தமது மாதாக்களின் பெயர்களினாலும், தம்முடைய நாமாவினாலும் மிகவும் பக்தியோடுகூடச் சாஸ்திரவிதிப்படி சிவலிங்கங்களைப் பிரதிஷ்டை செய்தார்; ஒவ்வொரு தினமும் இடைவிடாமல் ஸ்ரீ விசுவநாதரைத் தியானித்துக்கொண்டு பிறரால் அனுஷ்டிக்கமுடியாததும், மிகவும் கொடூரமானதும், சிறந்ததுமான தவத்தைச் செய்தார். அந்த ஸமயத்தில் பகவத் ஸங்கற்பத்தால் இவருடைய தாய்மார்களனைவரும் ஸ்ரீ விசுவநாதருடைய ஸந்நிதியில் மரணத்தையடைந்தார்கள். உடனே இந்த மிருகண்டு மகரிஷியானவர் தம்முடைய மாதாக்களுக்குச் செய்யவேண்டிய பரலோகத்திற்குரிய காரியங்களை விதிப்பிரகாரம் நன்கு அனுஷ்டித்தார்; பிறகும் தெளிவான புத்தியுடன் அந்தக் காசியிலேயே வெகுகாலம் வசித்தார். இவ்விதம் வசிக்கும் அந்த மிருகண்டு மகரிஷிக்கு மகேசுவரனுடைய பிரஸாதத்தால் மருத்வதீ என்ற பத்னியிடத்தில் மார்க்கண்டேயன் என்று பிரசித்திபெற்ற மிகவும் சக்திபொருந்திய ஒரு புதல்வர் தோன்றினார். அதிகமான பெருமையினைப்பெற்ற மார்க்கண்டேயர் என்ற அம்முனியும் உக்கிரமான தமது தவத்தால் பரமசிவனை யாராதித்தார்; அவருடைய அனுக்கிரகத்தால் தீர்க்கமான ஆயுளைப்பெற்று அனேகப் பிரளயகாலங்களைப் பார்த்தார்". இவ்விதம்கூறும்

சூதபுராணிகரை நோக்கி அங்குள்ள ரிஷிகள் "ஹே முனி சிரேஷ்டரான ஸூதமகரிஷியே! புத்திரபாக்கியமில்லாத மிருகண்டு ரிஷியானவர் பரமசிவத்தின் பிரஸாதத்தால் மருத்வதி என்ற தன்னுடைய பார்யையினிடத்தில் தீர்க்க ஆயுஸையுடைய புத்திரனையடைந்தார்" என்று தங்களால் சொல்லப்பட்டது. 'அந்தப் புத்திரனுக்குத்தீர்க்கமான ஆயுளானது எப்படி ஏற்பட்டது' என்கிற விஷயத்தையும் தங்களுடைய முகத்திலிருந்து விஸ்தாரமாகக் கேட்க விரும்புகின்றோம், தயைசெய்துதாங்கள் அனுக்கிரகிக்கவேண்டும்" என்று பிரார்த்தித்தார்கள்.

ஸூதமகரிஷியும் "ஹே முனிகளே சிரத்தையுடன் கேளுங்கள்" என்று சொல்லத் தொடங்கினர்.

"அதிகமான தேஜஸ்ஸையுடையவராயும், புத்திர பாக்கியத்தைப் பெறுதவராயுமிருக்கும அந்த மிருகண்டு முனியானவர் தமது பாரியையான மருத்வதியோடுகூட அதிக நியமத்தை யடைந்து செய்யப்பட்ட தமது தவத்தால் ஸ்ரீ சங்கரனுக்குச்சந்தோஷத்தை யுண்டுபண்ணினர். பினுகபாணியான ஸ்ரீவிசுவநாதர் இவருடைய தவத்தால் சந்தோஷத்தை யடைந்தவராய்ப் பத்னியுடன்கூடிய அம்முனியை நோக்கி 'என்னிடமிருந்து உனக்கு வேண்டிய வரனைக்கேட்டுக்கொள்' என்று சொல்லி அருளினர். சொல்லவே மகரிஷிசிரேஷ்டரான அவரும் "ஹே பகவன், பரமேசுவர, என்னுடைய ஸ்தோத்திரங்களினுலும், தபஸ்ஸினுலும் தங்களுக்கு என்னிடத்தில் சந்தோஷமிருக்குமாகில், வெகுகாலமாய் நான் புத்திரபாக்கியத்தைப் பெறுமலிருக்கிறபடியால்—ஹே ஸர்வ ஜகத்திற்கும் ஈசனுன பிரபோ, அந்தப் பாக்கியத்தை எனக்குக்கொடுத்து அனுகிரகிக்க வேண்டும்" என்று பிரார்த்தித்தார்.

இவரது வசனத்தைச் செவியுற்ற மகேசுவரரும் அந்த மிருகண்டு முனியைப்பார்த்து "அற்பமேனுங் குணமில்லாமல் வெகுகாலம் ஜீவித்திருக்கும் புதல்வனைநீ இச்சிக்கிருயா? அல்லது சிறந்த குணங்களையுடையவனுகவும், ஸர்வக்ஞனுகவும், பதினுறுவயது ஆயுளையுடையவனுகவும் உள்ள ஒரு புதல்வனை விரும்புகிருயா?" என்று வினவுங்கால், தர்மாத்மாவான அம்முனிவரும் பரமேசுவரனைப் பார்த்து "மூவுலகங்களுக்கும் பதியான ஹே ஈசனே, முட்டாளான புத்திரனைநான் விரும்பவில்லை. அற்பமான வயதையுடையவனுயிருப்பினும் ஸர்வக்ஞனன புத்திரனே எனக்கு வேண்டும்" என்று வேண்டினுர்.

இவரது வசனத்தைக்கேட்டபகவானும் "உமது அபிப்பிராயப்படியே நல்லதர்மசிந்தனையை உடையவனும், ஸகல விஷயங்களையும் நன்கறிந்தவனும், உத்தமமான குணங்களோடு கூடியவனும், எங்கும் பிரசித்திவாய்ந்த கீர்த்தியினைப் பெற்றவனும், ஞானக்கடலானவனும், பதினுறுவயதுள்ளவனுமான ஒரு புத்திரன் உமக்கு உண்டாகட்டும்" என்று அனுக்கிரகித்து உடனே மறைந்து விட்டார். அந்த மிருகண்டு முனியும் ஸ்ரீ விசுவநாதரிடத்திலிருந்து சிறந்த வரத்தையடைந்தவராயும், அதிக சந்தோஷத்துடன் கூடியவராயும் தமது ஆச்ரமத்திற்குச்சென்றுர். அங்குச் சென்றவுடன் அம்முனியினுடைய பாரியையான மருத்வதியானவள் சீக்கிரத்தில் கர்ப்பவதியானுள். இதையறிந்த அம்முனிவரும் தமது க்ருஹ்ய ஸூத்திரத்தில் கூறியவாறு அந்த ஸமயத்தில் முறையே அனுஷ்டிக்க வேண்டிய பும்ஸவனம், ஸீமந்தம் முதலிய கிரியைகளை அவ்வக்காலங்களில் கர்ப்பம் நன்றுக விருத்தியடைய வேண்டியதின் பொருட்டும், சுகமாய் பிரசவம் எற்படவேண்டியதின் பொருட்டும் நன்கு அனுஷ்டித்தார். பிறகு சிறந்த புண்ய காலத்தில் ஸகல கிருகங்க

ளும் சிரேஷ்டமான சுபபலத்தைக்கொடுக்கும் ஸாதனங்களை யடைந்திருக்கும் பொழுது உத்தமமான முகூர்த்தத்தில் மருத்வதி என்ற அம் முனியினுடைய தர்மபத்னியானவள் ஸகல துரிதங்களையும் நாசம்செய்யக்கூடியவனும், பால சூர் யன்போல் விளங்குகின்றவனுமான சிறந்த குமாரனை யுண்டு பண்ணினாள். அந்த ஸமயத்தில் ஆகாயத்தில் தேவர்களு டைய துந்துபி வாத்தியங்கள் சப்தித்தன. எல்லாதிக்குக் களும் நன்கு பிரகாசித்தன. ஜனங்களுடைய வாக்கானது மங்களகரமாயும் பிரீதியையுண்டுபண்ணுகிறதாயு மிருந்தது. திலோத்தமை முதலிய தேவஸ்திரீகளும், மகேந்திரன் முத லான அமரர்களும், வேதவிபாஸாதி முனிவர்களும் அந்தச் சிசுவுக்கு ஜாதகர்மம் முதலிய கிரியைகளை யனுஷ்டிக்க வேண்டி மிருகண்டு மகரிஷியினுடைய ஆச்ரமத்திற்குவந்து சேர்ந்தார்கள். வேதவியாஸரென்ற முனி சிரேஷ்டரான வர் அந்தக் குழந்தைக்கு ஜாதகர்மாவைத் தாமேசெய்தார். பத்தாவது தினத்தில் ஒரு முனிவர் அந்தச் சிசுவுக்கு நாம காணத்தைச் செய்தார். இவ்விதம் வேதத்திற் கூறியுள்ள பல மந்திரங்களாலும், தங்களுடைய ஆசீர்வாதங்களாலும் அந்த ஸமயத்தில் அந்தப்பாலனுக்குச் செய்ய வேண்டிய ரக்ஷையைச் செய்து பிறகு மிருகண்டுவினால் மரியாதை செய்யப்பட்டவர்களாய் வந்தவர்கள் யாவரும் தங்கள் தங் களுடைய இருப்பிடத்துக்குச் சென்றார்கள்.

வாராணஸி நகரத்திலுள்ள ஸகல ஜனங்களும் ஒருவ ருக்கொருவர் "மிருகண்டுவின் பாரியையான மருத்வதியினி டத்திலிருந்தும் பரமேசுவரன் தானே அவர்களுக்குப் புத் திரனாக அவதரித்திருக்கிறார். என்ன ஆச்சர்யம்! என்று ஸந்தோஷத்துடன் பேசிக்கொண்டார்கள்

பிறகு அக்குழந்தையின் பிதாவான மிருகண்டுவானவர் தமது புத்திரனுக்கு அவ்வக்காலங்களில் செய்ய வேண்டிய

நிஷ்கிரமணம், அன்னப்பிராசனம், சிகைவைப்பது, கர்ண வேதனம் முதலிய கர்மாக்களை விதிப்படி முறையே நடத்தினார்; ஐந்தாவது வயதில் பிரும்மதேஜஸ்ஸின் அபிவிருத்தியின் பொருட்டு விருதானுஷ்டானத்தைச் செய்தார்; பிறகு உபாகர்மாவையும் முறைப்படி நடத்தி வேதாத்தியயனத்தைச் செய்யும்படியும் செய்தார். வேதாத்தியயனம் முடிவதற்குள் அங்கங்களான ஆறு சாஸ்திரங்கள், உபாங்கங்களான நூல்கள் முதலியவைகளிலும் பெயருக்கு மாத்திரம் குருவை வைத்துக்கொண்டு சீக்கிரமாக ஞானத்தைப்பெற்ற அந்த மிருகண்டு புத்திரரானவர் விநயம் முதலான உத்தம குணங்களையும் பிரகாசப்படுத்தினார். வித்தியாப்பியாஸகாலத்தில் ஒவ்வொரு தினமும் பிக்ஷாடனம் செய்து அந்த அன்னத்தையே புசித்து வந்தார். மாதா, பிதா, ஆசார்யர் இவர்களுக்குப் பணிவிடை செய்வதில் எப்பொழுதும் ஊக்கமுடையவராயிருந்தார், இவ்விதம் உத்தம கர்மானுஷ்டானங்களைச் சிரத்தையுடன் நடத்திவந்த புத்திமானான அந்த மார்க்கண்டேயருக்குப் பதினைந்து ஆண்டுகள் நிரம்பிப் பதினாறுவது ஆண்டும் துவக்கமாயிற்று. இதையறிந்த அவரது பிதாவான மிருகண்டுமுனிவர் ஆதியில்தமது புதல்வனுக்குப் பரமேசுவரனால் அளிக்கப்பட்ட ஆயுளின் நிறைவை நினைத்து, 'மிகவும் மேதாவியான இப்புத்திரனைப் பூர்ண ஆயுளுடன் அனுபவிக்கும் படியான பாக்கியம் தமக்கு நேரவில்லையே' எனக்கருதித் துக்க ஸாகரத்திலாழ்ந்தார்; ஒன்றும் தோன்றாமல் மதிமயக்கங் கொண்டு அழுது கொண்டிருந்தார். இவ்விதம் அதிக துக்கத்துடன் அழுதுகொண்டிருக்கும் தமது தந்தையைக்கண்ணுற்ற மார்க்கண்டேயர் தமது பிதாவைநோக்கி "திடீரென்று தங்களுக்கு இவ்வித சோகம் எற்பட்டதற்குக் காரணம் யாது?" என்று பக்தியுடன் வினவினார். இவ்விதம் வினவும் தமதருமைப்புதல்வனின்

வசனத்தைச் செவியுற்ற மிருகண்டு முனிவர் அடியில் வருமாறு கூறுகின்றார்.

ஹே வத்ஸா! ஹே குழந்தாய்! உனது நிமித்தமாகவே நான் இப்பொழுது இவ்வளவு துக்கத்தையும் அனுபவிக்கிறேன். அதற்கு யாது காரணமெனில்,

आयुषोडशवर्षाणि तव दत्तं पिनाकिना ।
स कालोऽयमिह प्राप्तस्तस्माच्छोच्यामि नन्दन ॥

பினாகபாணியான ஸ்ரீ சங்கரரால் பதினாறுவயது தான் ஆயுளாக உனக்குக் கொடுக்கப்பட்டது. அப்பதினாறுவது ஆண்டு இப்பொழுது வந்து விட்டது. ஆகையால் ஹே! நந்தன, அளவில்லாவானந்தத்தை யுண்டுபண்ணுகிற புதல்வனே, இப்பொழுது நான் அதைக்குறித்தே சோகத்தை யடைகிறேன்.

இவ்வாறு தமது பிதாவால் கூறப்பட்ட வசனத்தைக் கேட்ட மார்க்கண்டேயர் "ஹே பிதாவே, எனது நிமித்தமாகத் தாங்கள் ஒருஸமயத்திலும் அற்பங்கூடச்சோகத்தை யடையவேண்டாம். ஸாதுக்களுக்கு ஸகல இஷ்டங்களையு மளிப்பவரும், மிருத்யுவை ஜயித்தவரும் மூன்று நேத்திரங்களைத் தரிப்பவரும், ஸர்வக்ஞரும், காளகூடமென்றகொடிய விஷத்தைப் புஜித்தவரும், காலகாலரெனப் பெயர்வாய்ந்தவருமான ஸ்ரீ மகாதேவரை ஆராதித்து அவருடைய அனுக்கிரகத்தால் தங்களுடைய சோகம்நிவர்த்தியாகும்படி செய்கிறேன்" என்று கூறினர்.

இந்த வசனத்தைக்கேட்ட அவருடைய தாய் தந்தையர் இருவரும் தங்களுக்கிருந்த சோகத்தைவிட்டுவிட்டு மிகவும் சந்தோஷத்துடன் கூடினவர்களாய்த் தமது புத்திரனை பார்த்து "ஹே தாதா! அப்பா குழந்தாய், எங்களுக்கேற்

பட்டசோகத்தைப் போக்கடிக்கவேண்டி மிருத்யுவை ஜயித்தவரான ஸ்ரீ பரமேசுவரனுடைய ஆராதனத்தைச் செய்கிறேன் என்று உன்னால் சொல்லப்பட்ட இந்த உபாயம் மிகச் சிறந்ததே. பக்தர்களைப் பாதுகாக்க வேண்டிக் கங்கணம் பூண்ட அந்தப் பிரபுவையே நீ சரணமாக அடை. அதற்குமேல் சிறந்தமார்க்கம் வேறில்லை. ஹே வத்ஸா, விருப்பத்திற்கு அதிகமாகவும் கொடுப்பவரும், எவ்விதமான துக்கத்தையும் போக்கும் திறமை வாய்ந்தவருமான அந்தப் பிரபுவைப்பற்றி நீ கேட்டதில்லையா? முன்னொரு ஸமயத்தில் திரிபுராந்தகரான அந்தப்பிரபுவானவர் காலபாசத்தால் கட்டப்பட்ட சுவேதகேதுவென்ற பக்தனைப் பாதுகாத்தார். ஹே அர்ப்பக, பின்னும் சிலாதருடைய புத்திரனும் மிருத்யுவால் பீடிக்கப்பட்டவனுமான எட்டு வயதுள்ள பாலனை ஸகல ஜனங்களும் ஸந்தோஷிக்கும்படியான நந்தி என்ற பெயருடன் தன்னுடைய ஸ்தானத்தில் வைத்திருக்கின்றார். மேலும், திருப்பாற்கடலைக் கடையும்போது அதிலிருந்து உண்டானதும் பிரளயகால அக்னிக்கு ஸமானமானதும், மிகவும் பயங்காமானதுமான “ஹாலா ஹலம்” என்ற கொடிய விஷத்தை ஸ்ரீ சந்திரசேகரான அந்தப்பிரபு மிகவும் சந்தோஷத்துடன் உண்டு மூவுலகங்களையும் பரிபாலித்தார். அன்றியும், மூன்று லோகங்களிலுமுள்ள ஐசுவரியங்களை அபகரிப்பவனும், அதிகமான பலத்தையுடையவனுமான ஜலந்தரன் என்ற அசுரனைச் சிவபிரான் தனது கால் பெருவிரலினுடைய கோட்டின் நுனியால் நாசம் செய்தார். மிகவும் பராக்கிரமசாலிகளான அசுரர்களால் வாசம் செய்யப்பட்ட திரிபுரமென்னும் பட்டணத்தைக் காய்ந்த புல்லைப்போல வெகு சுலபமாய் க்ஷணகாலத்திற்குள் அக்னிக்கு இரையாக்கினார். இன்னும் தூர்ஜடியானவர் த்ரைலோக்கிய ஐசுவரியம் தனக்கிருக்கிறதென்று கர்வங்கொண்டு மிகவும் மூடனாயிருந்த அந்தகாஸுரனையும் ஜயித்திருக்கிறார். மூவு

4

லகங்களிலுமுள்ள ஸகலப் பிராணிகளையும் ஜயிக்கும்திறமை தம்முடைய பாணங்களுக்கிருக்கின்றதென்று அதிக கர்வம் பூண்ட காமனைத் தமது பார்வையால் சரீரமற்றவனாகச் செய்து விட்டார். இவ்வித மஹிமை பொருந்தியவரும், பிரும்மா இந்திரன் முதலிய விண்ணவர்களுக்கும் அதிபதி யானவரும், எப்பொழுதும் சாசுவதமாய் விளங்குகிறவரும் ஸகல உலகங்களுக்கும் சிறந்த ரத்னம்போல் இருக்கிறவரு மான ஸ்ரீ பரமசிவனைச் சரணமாக அடை" என்று கூறி னார். இந்த உபதேசங்களைச் செவியுற்ற மார்க்கண்டேய ரும் தம்முடைய பிதுர்க்களிடம் அனுக்ஞை பெற்றுக்கொ ண்டு இந்த பில்வாரண்ய க்ஷேத்திரத்தில் விளங்கும் அமிர்த கடேசுவரரான ஸ்ரீ பரமேசுவரலிங்கத்தை மூன்று காலங்க ளிலும் ஸ்நானம்செய்து சுத்தராயிருந்துகொண்டு விதிப் படி பூஜித்தார். பூஜையின் முடிவில் சிறந்த ஸ்தோத்திரங்க ளால் துதித்து ஸந்தோஷத்துடன் நர்த்தனம் செய்துவந் தார். அதிபக்தி சிரத்தையுடன் இந்த மார்க்கண்டேயர் செய்யும்ஸ்துதிகளாலும் அர்ச்சனம்முதலிய ஆராதனங்களா லும் ஒரே திவசத்தில் ஸ்ரீ சங்கரர் மிகவும் சந்தோஷத்தை யடைந்துவிட்டார். ஒரே தினத்தில் சந்தோஷத்தையடைந் தவராயிருந்தபோதிலும்மற்றும்சிலகாலமும்பகவானானசம்பு வானவர் இவரைத்தமதுஸந்நிதியிலேயே வைத்துக்கொள்ள வேண்டுமெனக்கருதினார். சிலநாள் பரியந்தம் இவரால் அ னுஷ்டிக்கப்படும் பூஜை ஸ்தோத்திரம் நர்த்தனம் முதலிய வைகளை மிகுந்த சந்தோஷத்துடன் கிரகித்துக்கொண்டு வந்தார்.

இப்படியாகக் குறித்த தினத்தில் வழக்கம்போல் சிவ பூஜையிலும், சிவனுடைய ஸ்தோத்திரத்திலும், ஈடுபட்டு மெய்மறந்திருக்கும் இந்த மார்க்கண்டேயரைக் கொண்டு போக வேண்டுமென்ற எண்ணங் கொண்டு சிவந்த கண்களை

உடையவனும், பாம்பு, தேள் இவைகளை ரோமமாக உடையவனும், பயங்கரமான தம்ஷ்ட்ரை யுடையவனும், தன்னுடைய படர்களுடன் கூடியவனுமான யமன் இவருக்கருகில் வந்து இவருடைய கழுத்தைத் தனது காலபாசத்தால் சுற்றிக்கட்டினன். இவ்விதம் கட்டும் யமனைப்பார்த்து மார்க்கண்டேயர். "ஹே மேதாவியான யமதருமரே, நான் இப்பொழுது ஜகத்பதியான ஸ்ரீகங்காதரனையுத்தேசித்து அர்ச்சனம் ஸ்தோத்திரம் முதலிய ஆராதனங்களால் பூஜிக்க வேண்டுமென்று உபக்கிரமம் செய்திருக்கிறேன். ஆஹாரம், நித்திரை முதலியவைகளையும், களத்திரம், ராஜ்யம் முதலிய ஸுகங்களையும், பிராணனையும் பெரிதாகக் கருதுகிறதில்லை என்ற நியமத்துடன் ஒவ்வொருநாளும் இந்தக்காரியத்தை நடத்திக்கொண்டு வருகிறேன். இது பொய்யல்ல. உண்மையே. ஆகையால் இந்தக்காரியம் முடிவுபெறும் வரையில் தாங்களனுக்கிரகிக்கவேண்டும், எனது ஸ்தோத்திரத்தால் ஈசனுக்குத் திருப்தியை யுண்டுபண்ணி, உடனே உம்மிடம் வந்துசேருகிறேன்" என்று கூறினர்.

இவ்விதம் கூறும் மார்க்கண்டேயரிடம் காலனுனவன் அடிக்கடி மந்தஹாஸம் செய்து கொண்டு "முன் பெரியோர்களால் சொல்லப்பட்ட விஷயமானது உன்னல் கேட்கப் படவில்லை என்று எண்ணுகிறேன். முட்டாளான எவன் பால்யத்திலேயே தனக்குற்ற சிறந்த தர்மங்களைச் செய்ய வில்லையோ அவன் முதிர்ந்தவயதில் நடுவழியையடைந்த பிறவிக் குருடன்போலத் தாபத்தையடைகிருன். ஒரு வருஷகாலம் சுகமாயிருக்கவேண்டினல் அதற்குற்றகாரியங்களை எட்டு மாதங்களில் செய்துவிட வேண்டும். மறுதினம் ஒரு பகலும் ராத்திரியும் சுகமாய் வசிக்கவேண்டுமானல் அதற்கு வேண்டிய காரியத்தைப் பகலிலேயே முடித்துவிட வேண்டும். மறுதினம் அடைய வேண்டிய சுகத்திற்குற்ற காரி

யங்களை முதல் தினமே செய்ய வேண்டும். ஒருதிவஸத்தில் மாலையிலடைய வேண்டிய சுகத்திற்குக்காலையிலேயேவேண்டிய காரியங்களைச் செய்ய வேண்டும். கிழத்தனம் வந்த காலத்தில் சுகமாயிருக்க வேண்டிப் பால்யகாலத்திலேயே ஸகல காரியங்களையும் செய்துவிட வேண்டும். மரித்தபிறகு லோகாந்திரத்தில் சுகமாயிருக்கும் பொருட்டு ஜீவித்திருக்கும் காலம் வரையில் அதற்குறற நற்கர்மங்களையனுஷ்டிக்க வேண்டும். ஒருவனால் 'செய்யப்பட்டது, செய்யப்படாதது' என்பவற்றைக் காலன் பிரதீக்ஷிக்கமாட்டான். 'இது செய்யப்பட்டது, இது செய்ய வேண்டியது, இதுசெய்யப்பட்டதும் செய்யப்படாததுமாயிருக்கின்றது' என்று எண்ணுகின்றவனையும் கிருதாந்தன் தனதுவசமாகச்செய்துகொள்வான். ஆயுளின் முடிவுக்கால மேற்படாதவன் ஆயிரம் பாணங்களால் அடிக்கப்பட்டாலும் மரணத்தை யடைய மாட்டான். ஆயுளின் முடிவுக்காலத்தை யடைந்த ஒருவன் குசத்தினுடைய நுனியின் சம்பந்த மேற்பட்டாலும் ஜீவிக்கமாட்டான். ஆயிரம் சக்கரவர்த்திகளும், ஆயிரம் இந்திரர்களும் என்னால் கொண்டு போகப்பட்டிருக்கிறார்கள். ஹே சிரேஷ்டரான மார்க்கண்டேயரே, இந்த விஷயத்தில் நீர் கோபங் கொள்ளக்கூடாது" என்று அறிவித்தான்.

இவ்விதம் ஓரிடத்திலும் அபஜயத்தை யடையாதவனான யமனால் கூறப்பட்ட வசனத்தைக் கேட்டவரும் சிவஸ்தோத்திரத்தைச் செய்கின்றவருமான மார்க்கண்டேயர் "பரமேசுவரனுடைய அர்ச்சனம் ஸ்தோத்திரம் முதலிய காரியங்களைச் செய்துகொண்டிருப்பவரை எவர்கள் ஹிம்ஸிக்கிறார்களோ அவர்கள் சீக்கிரமாக நாசத்தையடைவார்கள். ஆகையால் சிவார்ச்சனையில் முயற்சி யுள்ளவனாயிருக்கும் என்னை இந்த ஸமயத்தில் ஒன்றும் செய்யக்கூடாதென்று நான் உன்னைத் தடுக்கிறேன்." என்று காலனிடம்

தெரிவித்து மறுபடியும் "எங்ஙனம் ஓர் அரசனிடத்தில் வேலைசெய்யும் பிருத்தியர்களுக்கு அவ்வரசனே ரக்ஷகனே அவ்விதமே சிவபக்தர்களுக்கு மகாத்மாவான ஸ்ரீ பரமேசுவரர் யஜமானனுகயிருந்து பாதுகாக்கிருர். சிவனடியார்கள் மலைகளைப் பிளப்பார்கள். ஸமுத்திரங்களைப் பானம்செய்து விடுவார்கள். பூமியை ஆகாயமாகவும், ஆகாயத்தைப் பூமியாகவும் மாற்றிவிடுவார்கள். பிரும்மா, இந்திரன் முதலான விண்ணவர்களைக்கூட ஒரு பொருட்டாகக் கருதமாட்டார்கள். சங்கரனுக்குக் கிங்கரராயிருப்போர்களுக்கு எதுதான் செய்யமுடியாது! பிரும்மா, இந்திரன், யமன், யமதூதர் முதலியவர்களும், இதரர்களும், சிவபக்தர்களிடம் தங்களது சக்தியை வெளியிட அருகர்களாக மாட்டார்கள். ஹே மிருத்யோ! திருடமான ஈசுவர பக்தியையுடையவர்களுக்கு ஒருகாலும் ஆபத்துக்கள் ஏற்படமாட்டா எனப் பெரியோர்கள் கூறுவதை நீர் கேட்டதில்லையா? கோபத்தையடைந்த ஈசுவரபக்தர்களை பிரும்மாமுதலானதேவர்களாலும் ஒன்றும் செய்யமுடியாது." என்றும் கூறினர். இவ்விதம் அதட்டும் மார்க்கண்டேயருடைய வசனத்தைச்செவியுற்ற பகவானுன காலன் மிகவும் கோபத்துடன் கூடினவனுய் மூன்று உலங்களையும் சாப்பிடுகிறவன்போல் கம்பீரமான வசனங்களால் "புத்தியில்லாத ஹே பிராம்மணரே, கங்கா நதியில் எவ்வளவு மணல்களிருக்கின்றனவோ அவ்வளவு சங்கியையுடைய பிரும்மாக்கள் காலனுன என்னால் ஸம்ஹாரம் செய்யப்பட்டிருக்கிருர்கள். அதிக வார்த்தை பேசுவதால் யாதொருபயனுமில்லை. அதிகமான என்னுடைய பராக்கிரமத்தைப் பாரும்" என்று மறுபடியும் கூறினுன். உக்கிரமான கோபத்துடன் சங்கருடன் சேர்ந்திருக்கும் மார்க்கண்டேயரைத் தனது பாசத்தால் கட்டி அதிக பலவானுன யமன் வேகமாக இழுத்தான். இழுத்த மாத்திரத்தில் அதிக கோபத்

துடன் கூடிய ஸ்ரீ பரமேசுவரர் தமது பக்தனான மார்க்கண்டேயரிடம் வந்த மிருத்யுவை நாசம் செய்யவேண்டி அவனைப் பஸ்பமாகச் செய்து விட்டார். பரமேசுவரனுடைய கோபாக்னியால் யமன் தகிக்கப்பட்டதைப்பார்த்த அவனுடைய தூதர்களனைவரும் பயந்து அந்த ஸந்நிதியைவிட்டு ஓடிவிட்டார்கள். உடனே ஸ்ரீபரமேசுவரன் மார்க்கண்டேய முனிவரால் செய்யப்பட்ட ஸ்தோத்திரங்களால் ஸந்தோஷத்தை யடைந்தவராய் அவருக்கு நித்யத்வத்தைக்கொடுத்தார். மகாத்மாவான மார்க்கண்டேயரும் தம்முடைய தாய் தந்தையர்களுக்கு ஸந்தோஷத்திற்குக்காரணமானதும் ஈசனால் அளிக்கப்பட்டதுமான நித்யத்வத்தை யடைந்து உலகப்பிரசித்தியின் பொருட்டு அந்த ஈசுவரனிடத்திலிருந்தும் மற்றும் சிலவரங்களையும் பெற்றார்." என்றுகூறி "மார்க்கண்டேயரால் சிவபெருமானைக்குறித்து யாதொரு ஸ்தோத்திரமானது செய்யப்பட்டதோ அதனைச் சிவபிரான் ஸந்நிதியில் படிக்கும் மானிடோத்தமர்களை யமன்ஒருகாலும் பார்க்கவும்மாட்டான்." என்றுமறிவித்தார். "இவ்விதம்நிரூபிக்கப்பட்ட மிகவும் பாவனமான மகேசுவரனுடைய மகாத்மியத்தைப் படிப்போர் கேட்போர் யாவரும் தீர்க்கமான ஆயுளையடைவார்கள்" என்றுகூறி சூதபுராணிகர் அத்யாயத்தையும் முடித்தார்.

இவ்விதம் ஸ்காந்த மென்கிற மகாபுராணத்தில் ஸப்தாரண்ய ப்ரசம்ஸையில் பில்வாரண்ய மகாத்மிய மென்கிற 162 ஆவது அத்தியாயம் முடிவுபெற்றது. சுபம்.

---

# அத்தியாயம் 4.



மறுபடியும் அங்குள்ள மஹரிஷிகளனைவரும் ஸூதமகரிஷியைப் பார்த்துப் "புண்யசரித்திரங்களைப்போதிப்பவர்ளுக்குள் சிறந்தவரான ஹே மஹரிஷியே" என்று ஸம்போதனம் செய்து " பினாகபாணியாயும் விருஷபத்வஜராயுமிருக்கிற ஸ்ரீ சந்திரசேகரர் எந்த ஸ்தோத்திரத்தால் சந்தோஷத்தை யடைந்து பாசத்தை ஹஸ்தத்திலுடையவனும், கோபத்துடன் கூடியவனும், பயங்கரமானவனுமாயிருந்தகாலனை ஸம்ஹாரம்செய்து அந்த மார்க்கண்டேயமகரிஷிக்குத் தேவபாவத்தை யளித்தாரோ அந்த மிகவும் மகிமைபொருந்திய ஸ்தோத்திரத்தைக் கருணைக்கடலான தாங்கள் எங்களுக்குக் கூறவேண்டும்" எனப் பிரார்த்திக்க, அதற்கிணங்கிய ஸூதமுனிவரும் "ஹே பிராமண சிரேஷ்டர்களே! மிகவும் ஸாரமானதும், ரஹஸ்யமானதும் ஸகலபயங்களையும் நிவர்த்திசெய்யக்கூடியதும் காலமிருத்யு அபமிருத்யு என்ற இவ்விரண்டையும் நாசம் செய்கின்றதும், எவ்வித துக்கங்களையும் சமனம் பண்ணுகிறதும், விரும்பிய பலன்களையளிப்பதுமானமார்க்கண்டேயரால் செய்யப்பட்டசிவஸ்தோத்திரத்தை ஸங்க்ரஹமாக இப்போதுஉங்களுக்குச்சொல்லுகிறேன் இந்த ஸ்தோத்திரத்தை ஸ்மரித்தமாத்திரத்தில் யமதூதர்கள் வெகு தூரத்திலிருந்தும் ஓடி விடுவார்கள்" என்று அவர்களுக்கறிவித்து, மார்க்கண்டேயர் செய்த ஸ்தோத்திரத்தை அடியில் வருமாறு சூதர் உபதேசிக்கின்றார்.

1. "ஹே பரமேசுவர, ஹே சம்போ ! ஹே தேவர்களுக்கெல்லாம் சிறந்தவரே ஹே பார்வதிநாத ஹே பிரபுவே! ஹே தந்தையே ! தங்களுடைய சரணகமலங்களைச் சரணமாக அடைகின்றேன்.

2. லோகத்தைப்பாதுகாக்கவேண்டி உண்ட விஷத்தால் நீலமான கண்டத்தை உடையவரே, ஹே விரூபாக்ஷ! சுத்தமாயும் ஆனந்த ஸ்வரூபமாயுமிருக்கும் சரீரத்தையுடைய ஹே மகேசுவர! தங்களுடைய சரணகமலங்களைச்சரணமாக அடைகின்றேன்.

3. மூன்று நேத்திரங்களையுடையவரும் விருஷபவாகனத்தில் வீற்றிருக்கின்றவரும், ஸகல உலகங்களுக்கும் ஆனந்தத்தையுண்டு பண்ணுகிறவருமான ஹே சங்கர! உம்முடைய சரணகமலங்களைச் சரணமாக அடைகின்றேன்.

4. மிகவும் பிரகாச ஸ்வரூபமாய் விளங்குகின்றவரும் ஸகல தேவதைகளுக்கும் அதிபதியாயிருப்பவரும் விருஷபத்தைத்வஜத்திலுடையவரும் பிதாவாயிருப்பவரும் ஆகிய ஹே மகாதேவ! உம்முடைய சரணகமலங்களைச்சரணமாக அடைகின்றேன்.

5. ஒரு சமயத்திலும் நாசத்தையடையாதவராயும், ஸகல உலகங்களுக்கும் ஈசனும், பிரபுவாயும், விளங்கும் பிதாவான ஹே சம்போ! உம்முடைய சரணகமலங்களைச் சரணமாக அடைகின்றேன்.

6. மாயாதீதராயும், குணங்களை அதிக்ரமித்தவராயும் மாயாஸ்வரூபமான இந்த ஜகத்திற்குப்பதியாயும் விளங்கும் ஹே உமேச! உம்முடைய சரணகமலங்களைச் சரணமாக அடைகின்றேன்.

7. பலவிதமான ரூபங்களையுடையவராயும், எவ்விதமென்றறிய முடியாதவராயுமிருக்கிற உங்களின் பொருட்டு நமஸ்காரம். ஸதஸஸ்பதியாயும், ஸம்ஸாரமென்னும் கடலுக்குக் கப்பல்போல் விளங்குகிறவராயும் இருக்கும் உங்களின் பொருட்டு வந்தனம்.

8. படைத்தல், காத்தல், அழித்தல் என்கிற இம் மூன்றுகாரியங்களையும் பிரும்மா, விஷ்ணு, ருத்திரர்என்றமும்மூர்த்தி ஸ்வரூபமாகஇருந்து நடத்துகிறவராயும், ஸர்வஜகத்தையும் பரிபாலிப்பவராயும், காலஸ்வரூபியாயும் விளங்கும் தங்களையும் பொருட்டு நமஸ்காரம்.

9. ஒருவிதமானகுணத்தையும்அடையாதவராயிருந்த போதிலும் குணங்களோடு கூடியவரென்று கருதப்படக் கூடியவராயும், ஸகலகுணங்களுக்கும்இருப்பிடமானவராயும், ஸத்வம், ரஜஸ், தமஸ், என்ற இம்மூன்று குணங்களுக்கும் புறம்பாய் விளங்கும் கௌரீபதியாயுமுள்ள தங்களுக்கு நமஸ்காரம்.

10. பசுவென்னும் பிராணிகளுக்குப்பதியாயும், மிகவும் பரிசுத்தமாயுமிருக்கிற உமக்கு வந்தனம். அக்னியை மத்தியிலுடையவரும், அகோரமென்ற பெயரைத் தரிப்பவருமான உமக்கு நமஸ்காரம்.

11 சந்திரன் சூரியன் அக்னி இவர்களை நேத்திரமாக உடையவராயும், திரிபுர அஸுரர்களை ஸம்ஹரித்தவராயும் இருக்கிற உமக்கு வந்தனம். நன்கு அலங்கரிக்கப்பட்ட உமாதேவியாகிய பாதிசரீரத்தையுடையவரும், வாமதேவர் என்ற பெயரினைக்கொண்டவருமான உமக்கு நமஸ்காரம்.

12. மிகவும் சிறந்த அவயவங்களோடு கூடிய திவ்ய சரீரத்தையுடையவரான உமக்கு நமஸ்காரம். வேதங்களின் தத்துவார்த்தத்தை உபதேசிப்பவராயும், வேதாந்தத்தால் அறியக்கூடிய மகிமைஉடையவராயுமிருக்கிறஸ்ரீநீலகண்ட, உமக்கு நமஸ்காரம்.

13. யோகிகளாலடையத் தகுந்தவராயும், யோகிகளுக்கெல்லா மதிபதியாயும், யோகியாயு மிருக்கிற உம்மைக்குறித்து நமஸ்காரம். நித்தியமாயும் அநித்தியமாயு

முள்ள ஸ்வரூபத்தை யுடையவராயும், தோஷமற்றவராயு மிருக்கிற கங்காதா, உமக்கு நமஸ்காரம்.

14. மிகவும் பூஜ்யரான ஹே பரமேசுவர, என்னுடைய சித்தமானது சஞ்சலபாவத்தையடையாமல் உம்மிடத்திலேயே எப்படி ஸ்திரமாயிருக்குமோ அவ்விதம் செய்யவேண்டும். என்னுடைய அபீஷ்டத்தையும் தாங்கள் பூர்த்தி செய்யவேண்டும்.

15. ஹே ஈசா, உம்மிடத்தில் வைக்கப்பட்ட என்னுடைய சித்தமானது எப்படிச்செய்தால் உம்முடைய தியானத்தைத்தவிர வேறுவிதமாக இருக்கமாட்டாதோ, ஹே பகவன், என்னால் பூஜிக்கப்பட்டவரான தேவரீர் அவ்விதம் செய்யும். என்னுடைய மாதாபிதாக்களுக்குஎன்விஷயமான துக்கம் எப்படிச்செய்தால் ஏற்படாதோ அவ்விதம் தாங்கள் அனுக்கிரகிக்க வேண்டும்.

16. அறிவில்லாத பாலனுன என்னல் உம்முடைய சந்தோஷத்தின்பொருட்டு யாதொரு ஸ்தோத்திரமானது செய்யப்பட்டதோ ஹே மகேச, உமது ஸந்நிதிமாத்திரத்தால் அது பூராவும் பூர்ணமாய் இருக்கும்தன்மையையடையட்டும்,

17. இவ்விதம் பாமசிவத்தை மிகவும் பக்தியோடு போற்றுகிறவராயும், சிவபக்தர்களுக்குள் முதன்மைவாய்ந்தவராயுமிருக்கிறமிருகண்டு மகரிஷியின் புத்திரரானமார்க்கண்டேயரைப் பாசம், கதை, கத்தி என்ற ஆயுதங்களைத்தனது காத்திலேந்தினவனுன வைவஸ்வதனுனவன் தனது பாசக்கயிற்றால் கட்டுவதற்கு எத்தனித்தான்.

18. மிகவும் கோபத்துடன் கூடினவனும், கொடூரமான வார்த்தைகளைப் பேசுகிறவனுமிருக்கிற அந்தக்கா

லன் சிவலிங்கத்தோடுகூட அம்முனியைத்தனதுபாசத்தால் கட்டினுன்.

19. இந்த ஸமயத்தில் பிராணிகளுக்கு ஏற்படும் பாச பந்தத்தை விமோசனம் பண்ணுகிறவராயும், திரிபுரத்தை எரித்தவராயும், பக்தனை அனுக்கிரகிக்கவேண்டி எட்டு ஆயு தங்களோடு கூடிய எட்டுக்கைகளைத்தரிப்பவராயும், மூன்று நேத்திரங்களுடன் கூடினவராயும், புலித்தோலை ஆடையாக உடையவராயும் இருக்கிற ஸர்வேசுவரரான ஸ்ரீ சம்பு சூலத் தைக் கையில் எடுத்துக்கொண்டு யமனைத் தமது இடது கா லால் உதைத்து ஹிம்சித்தார். தெற்குதிக்கிற்குப்பதியான அந்த யமன் தெற்குமுகமாய் நின்ற சிவபெருமானுடைய ஒரு பாதத்தால் கொடுக்கப்பட்ட உதையால் ஜீவனை இழந் தவனுனன்; பிரளயகாலத்திலுதித்த மேகங்களுடைய சப் தத்திற்கொப்பான தொனியால் ஹிருதயம் பிளக்கப்பட்டு ரக்தத்தைக் கக்கினுன். இரண்டாய்ப் பிளக்கப்பட்ட சரீ ரத்தையுடைய அந்த மிருத்யு தெற்குப்பக்கத்தில் வைக்கப் பட்ட சிரஸ்ஸையுடையவனுகப் பூமியில் விழுந்தான். இவ் விதம் அவன் விழுந்ததினுல் இந்தப்பூமிக்குப்பாதாளலோக பரியந்தம் பிளவு ஏற்பட்டது. அந்த சமயத்தில் பாதாளத் திலிருந்தும் அதிக ஜலமானது வெளிக்கிளம்பிற்று. அவ் விதம் வெளிந்ததாயும், பார்க்க முடியாததாயும், அதிகபயத் தை யுண்டுபண்ணுகிறதாயுமிருக்கிற அந்தப்பிரவாகத்தைப் பார்த்துத் தேவர்கள், முனிவர்கள், ஸகலமானகின்னரர்கள் முதலியயாவரும் பயத்தினுல் பீடிக்கப்பட்டும் பூமியில்விழுந் தார்கள். அந்த ஸமயத்தில் ஸ்ரீ அமிருதகடேசுவரானவர் யமனுடையபாசத்தால்கட்டப்பட்டவரும், பயந்தவருமான மிருகண்டுமுனியின் புத்திரனைத் தமது கையால் தடவிக் கொடுத்துஆச்வாஸப்படுத்தினுர். அந்தமார்க்கண்டேயரைப் பார்த்து "நீ சிரஞ்சீவியாயிருப்பாய்" என்ற வரத்தையும்

கொடுத்தார்; "எனது பக்தர்களுக்குள் நீ மிகவும் சிறந்தவன்." என்றும் சொன்னார். இவ்விதம் சூதபுராணிகரால் கூறப்பட்டசிவபக்தனுடைய மாஹாத்மியத்தைச்செவியுற்ற அங்குள்ள சகலமான முனிச் சிரேஷ்டர்களும் மிகவும் ஆச்சர்யத்தை யடைந்த ஹிருதயத்துடனும், ஒருவருக்கொருவர் விசுவாஸத்துடனும் "உலகில் எவர்கள் அதிகமான சிவபக்தியுடன் சிவபூஜையில் ஈடுபட்டிருக்கின்றார்களோ அவர்கள் பரமேசுவரனுடைய பூஜையின் வைபவத்தால் ஒரு சமயத்திலும் கஷ்டத்தையடையமாட்டார்கள் என்கிற இந்த விஷயமானது முன்னர் நடந்த சரித்திரத்தால் பிரத்யக்ஷமாக இப்பொழுது நமக்குக் காண்பிக்கப்பட்டது. இப்பொழுது பிரத்தியக்ஷத்தில் அறியப்பட்ட மிகவும்புத்திமானான மார்க்கண்டேயருடைய சிவபூஜையின் மகிமையானது இந்த பில்வாரண்யத்தில் விசேஷமான பலத்தைக் கொடுத்திருக்கின்றது" என்றுகூறி அமிர்தகடோத்பவரான ஸ்ரீமகேசுவரனை மிகவும்போற்றினார்கள். மார்க்கண்டேயரால் சிவஸந்நிதியில் செய்யப்பட்ட ஸ்தோத்திரத்தைக் கிரகித்துக்கொண்டு மறுபடியும் காலகாலராயும் கருணைக்கடலாயும் விளங்கும் மஹாதேவரை ஸ்துதித்து அந்தப் பில்வாரண்யக்ஷேத்திரத்திரத்திலேயே யாதொரு இடையூறுமின்றிச் சுகமாய் வசித்து வந்தார்கள். மார்க்கண்டேயரும் பில்வாடவீசுவரரான சிவனுடைய அனுக்கிரகத்தால் நித்யமாய் இருக்கும் தன்மையையடைந்து சிரேஷ்டராயும், பிரார்த்திக்கத் தகுந்தவராயும், வியாபகராயுமிருக்கிற அந்தக் கௌரீநாதனைக்குறித்து "ஹே ஸ்வாமின், தங்களுடைய அனுக்கிரகத்தால் நான் நித்யத்வத்தையடைந்தேன். பக்தனானஎன்னைப்பாது காக்கவேண்டித் தங்களால் யமனும் இப்பொழுது ஸம்ஹாரம் செய்யப்பட்டான். அற்புதமான இந்தச் சரித்திரமானது உலகெங்கும் எப்படிப் பிரசித்தியடையுமோ, ஸமஸ்த

தேவதைகளாலும் நமஸ்கரிக்கப்படத் தகுந்த ஹே மஹா தேவ, அவ்விதம் நீர் செய்யவேண்டுமாய்ப் பிரார்த்திக்கிறேன். ஹே பார்வதீச! உம்முடைய ஆலயத்திற்குக் கிழக்கு திக்கில் இந்தப் பில்வாரண்யத்தில் எனதுபெயரால் சகல பாபத்தையும் போக்கடிக்கும் சக்தியுடன்கூடிய ஒரு கிணறானது என்னால் உண்டு பண்ணப் பட்டிருக்கின்றது. ஹே லோகேசுவா, உம்முடைய லிங்கத்திற்கு அபிஷேகம் செய்ய வேண்டியதின்பொருட்டு என்னால் முன்னமேயே கங்கை முதலிய ஸகல புண்ய தீர்த்தங்களும் அந்தக்கூபத்தில் ஆவாஹனம் செய்யப்பட்டிருக்கின்றன. ஹே பகவன், ஒவ்வொருநாளும் கங்காதீர்த்தத்திற்குச் சமானமான இந்தக் கிணற்று தீர்த்தத்தை வஸ்திரத்தால் வடிக்கட்டி உமக்கு அபிஷேகம் செய்திருக்கிறேன். இதற்குப்பிறகும் எப்பொழுதும் சகலமான முனிவர்களாலும் இந்தத்தீர்த்தால் அபிஷேகம் செய்யப்பட்டு நன்கு நீர் பிரார்த்திக்கப்பட்டீரேயானால் அதனால் உம்முடைய பிரஸாதமும் லோகத்தில் விசேஷமானபிரசித்தியும்ஏற்படும்.இவ்விஷயத்திற்சந்தேகமில்லை. எவன் வேறு தீர்த்தத்தால் உம்முடைய லிங்கத்திற்கு அபிஷேகம் செய்கிறானோ அவன் அந்த பலத்தையடையமாட்டான். அபராதம் செய்தவனாகவும் ஆய்விடுவான். லிங்கமும் விகாரமாக ஆய்விடும். உம்முடையஅனுக்கிரஹத்தைப் பெறவேண்டி நான் ஜிதேந்திரியனாகவிருந்துகொண்டு, பிஞ்சில என்ற விருக்ஷ மூலத்தையடைந்து தவம் செய்ததுடன் ஒவ்வொருநாளும் அந்தப் பிஞ்சில விருக்ஷத்தின் புஷ்பங்களால் உம்மைப் பூஜித்துவந்தேன். அவ்விதம் நியமத்துடன் பூஜித்ததால் உம்முடைய அனுக்கிரஹம் ஏற்பட்டு அதனால் மிருத்யுவை ஜயித்தேன். அந்தப் பிஞ்சில புஷ்பங்களினால் செய்யும் அர்ச்சனையால் பகவான் திருப்தியடைவதுபோல வேறுபுஷ்பங்களால்கோடிக்கணக்கான அர்ச்சனைகளைச்செய்

தாலும் அவ்வளவு ஸந்தோஷத்தை யடையமாட்டார். ஆகையால் அவ்வித சிறந்த புஷ்பங்களினுலேயே சகலமான ஜனங்களும் பகவானுன உம்மை அர்ச்சித்து இஷ்டத்தைப் பெறட்டும். அந்தப் பிஞ்சில என்கிற வல்லிக்கு ஈசுவராதிகளுடைய கோபத்தால் எதிர்க்கப்படாத ஔத்பாதிகமான தோஷங்கள் எப்பொழுது இந்த பூமியில் ஏற்படுகின்றனவோ, அக்காலத்தில் இது காய்ந்து போகட்டும். எவன் இந்தக்கொடியையறுக்கிருனே அவன் அதிகமானபாபத்தைச்செய்தவனுகிருன். அவனுடைய சிறந்த வம்சமும் நாசத்தையடைகின்றது. என்னுடைய இந்தப்பிரார்த்தனையைத் தாங்கள் நிறைவேற்றவேண்டும். தங்களுடைய பிரசாதத்தால்அமிர்தகடேசுவராருக்குநைருதிதிக்கில்விளங்கும்இந்தப் பிஞ்சிலாலதையானதுசர்வதா பிரகாசித்துக்கொண்டிருக்கட்டும். என்னுல் உண்டுபண்ணப்பட்ட அமிர்தகடேசுவரரென்னும் கூபத்தினுடைய ஜலத்தால் எவனுடைய சரீரமானது நனைக்கப்படுகிறதோ அவனுடைய வம்சத்திலுண்டான பிதுருக்கள் யாவரும் நன்கு திருப்தியடைந்து மோக்ஷமென்னும் சிறந்த பதவியை யடையட்டும். பங்குனி மாதம் கிருஷ்ணபக்ஷத்தில் அச்வினி நக்ஷத்திரத்தோடு கூடியதினத்தில் அருணேயத ஸமயத்தில் சுத்தனுயிருந்து அஞ்சலிபந்தம் செய்துகொண்டுஎன்னுல்உண்டுபன்னப்பட்ட இந்ததீர்த்தத்தையடைந்துஅதிகமானபக்தியுடன் தீர்த்தபாலரையும்பைரவரையும் நமஸ்கரித்துக்கடத்தில் தீர்த்தத்தை எடுத்துத்திரியம்பகம் ஸத்யோஜாதம் கத்ருத்ராயா என்ற இம்மகாமந்திரங்களையும் முறையே ஜபித்துத் தீர்த்தத்தில் கொஞ்சம் உட்கொண்டு பிறகு அந்தக் கூபத்திலிருந்தும் நூற்றெட்டுக் குடங்களை ஒருவன் அபிஷேகம் செய்து கொண்டானேயானுல்அவன்பிரும்மஹத்தி,ப்ரூணஹத்தி,குருஹத்தி, மத்யபானம், செல்லக்கூடாத இடங்களுக்குச் செல்வது இவைக

ளாலுண்டாகும் பாபங்களிலிருந்தும் விடுபட்டவனாக ஆகி முடிவில் உத்தமகதியை யடைகிறான். மற்றுமுள்ள புண்ய கால ஸமயங்களில் பூமியிலுள்ள எந்த மனிதர்கள் இந்தத் தீர்த்தத்தில் ஸ்நானம் செய்கிறார்களோ அவர்களுக்கு யம னிடத்திலிருந்து ஒருகாலும் பயம் உண்டாகாது. எவன் ஒவ்வொருநாளும் என்னால் உண்டு பண்ணப்பட்ட கூபத்தி லிருந்து தீர்த்தத்தை எடுத்து வஸ்திரத்தால் வடிகட்டி ஏலக் காய், விளாமிச்சவேர் முதலிய வாஸனைத்திரவியங்களைச் சேர்த்து, அந்தத் தீர்த்தத்தால் பக்தி சிரத்தையுடன் அமிர் தகடேசுவரருக்கு அபிஷேகம் செய்கிறானோ அவனே பாக் கியசாலி; அவனே புண்ணியவான், அவனை நான் நமஸ்கரிக் கிறேன். அவ்வித மகான் தனது ஜீவதசையுள்ளவரையில் அஷ்ட ஐசுவரியங்களையு மனுபவித்துக் கடைசியில் உம் முடைய ஸாயுஜ்யத்தையடைவான். ஹே ஸர்வஜகத்பதே, இங்கு என்னால் கூறப்பட்ட ஸகலகாரியங்களும் அவ்விதமே நடைபெறுமென்று தாங்களும் வரங்கொடுக்க வேண்டும். அந்த வரத்தால் நானும் விசேஷக்யாதியைப் பெற்று இந்த இடத்தில் சுகமாய் வசித்துக் கொண்டிருப்பேன்." என்று வேண்டினார். இவ்விதம் மார்க்கண்டேயமுனிவரால் பிரார்த் தித்துக் கேட்கப்பட்ட பிரபுவானவர் பக்தனுக்கு ஸ்வாதீன மாக இருந்து கொண்டு அவருடைய இஷ்டத்தையளித்தார்.

य एतदाख्यानमतीव हृद्यं पठन्ति शृण्वन्ति च ये स्मरन्ति ।
न ते गमिष्यन्ति यमस्य लोकं पूता मुनीशाभवतां वदामि ॥

"ஹே முனிசிரேஷ்டர்களே, மிகவும் சிறந்ததான இந் தச்சரித்திரத்தை எவர்கள் படிக்கிறார்களோ, எவர்கள் கேட்கிறார்களோ, எவர்கள் ஸ்மரிக்கிறார்களோ, அவர்கள்

சுத்தர்களாக ஆகி, யமனுடைய லோகத்தை அடையமாட்டார்கள்" என்றுகூறி அத்தியாயத்தையும் முடித்தார்.

இவ்விதம் ஸ்காந்த மென்கிற மகாபுராணத்தில் ஸப்தாரண்ய ப்ரசம்ஸையில் பில்வாரண்ய மகாத்மிய மென்கிற 163 ஆவது அத்தியாயம் முடிவுபெற்றது. சுபம்.

---

## அத்தியாயம் 5.

பில்வாரண்யவாஸிகளான ரிஷிகள் மறுபடியும் ஸூத புராணிகரிடம் பின் வருமாறு அறிவிக்கலாயினர். அது "ஸமஸ்த ஜனங்களாலேயும் வந்தனம் செய்யப்படத்தகுந்தவராயும், புண்ணிய சரிதங்களைச் சொல்லுகிறவர்களுக்குட் சிறந்தவராயும் விளங்கும் ஹே ஸூதமகரிஷியே, தங்களுடைய முகாம்போஜத்திலிருந்தும் பெருகிவருகின்ற உத்தமமான புராணமென்னும் அமிர்தத்தை எவ்வளவு உட்கொண்டும் எங்களுக்கு அற்பங்கூடத் திருப்தியுண்டாகவில்லை. ஸ்ரீ பரமேசுவரனால் யமன் ஸம்ஹாரம் செய்யப்பட்ட பிறகு இந்த ஜகத்தானது என்ன செய்தது? பிராணிகள் அவ்வக் காலங்களில்மாணத்தையடையாமல் தீர்க்கஆயுளுடனிருக்குமாகில் இப்பூமியானது அந்தப் பிராணிகளின் பாரத்தால் பீடிக்கப்படும். யமன் இல்லாவிடில் இவ்வுலகம் பூராவும் எதிர்பார்க்காமல் நாசத்தையடையும். ஆகையால் ஹே தர்மதின் தத்வத்தை நன்கறிந்த பிரபுவே, பிறகு நடந்த சரித்திரத்தையும் எங்களுக்குக் கூறவேண்டும்" என்பதே.

இவர்களின் பிரார்த்தனையை அங்கீகரித்த ஸூதமகரிஷியும் "ஹே முனிசிரேஷ்டர்களே, ஸமஸ்தப் பிராணிகளுக்கும் ஆச்சர்யத்தை யுண்டுபண்ணுகிறதான ஸ்ரீ மகேசுவரனுடைய சரித்திரத்தைக்கூறுகின்றேன். செவியுறுங்கள்"

என்று கூறி, முனிவர்களைப் பார்த்து ஸ்ரீ சந்திரசேகரரால் யமனுடைய வதம் ஏற்பட்ட பிறகு பூமியானவள் பிராணிகளுடைய பாரத்தால் மிகவும்சிரமப்பட்டுப் பிரும்மாவைச் சரணமாக அடைந்து 'தனக்கேற்பட்டிருக்கும் கஷ்டத்தைச் சகிக்கமுடியவில்லை' என்று அவரிடம்விக்ஞாபனம்செய்தாள். பூமாதேவியால் செய்யப்பட்ட இந்த விக்ஞாபனத்தைக் கேட்ட பிதாமஹரானவர் இந்திரன் முதலிய விண்ணவர்களோடும், அப்ஸரஸ் முதலான தேவஸ்திரீகளோடும், தேவ வருஷங்களில் ஆயிரம் ஆண்டுகள் சென்றபிறகு தங்களுக்கு ரக்ஷகரான விஷ்ணுவினுடைய சிறந்ததான வைகுண்டஸ்தானத்தையடைந்து அங்கு விளங்கும் ஹரியைத் துதித்தார். அந்த ஹரியும் ஜகத்தை ரக்ஷிக்க வேண்டியதின் நிமித்தமாக இவர்கள் தம்மிடம் வந்திருக்கிறார்களென்பதைப் பிரும்மாவினுடைய வாக்கியத்தாலறிந்து அவர்களுடன்கூட எப்பொழுதும் மங்கள ஸ்வரூபமாயும், ஸகல ஆபரணங்களாலும் அலங்கிருதமாயும் உள்ள ஸனகாதிகளான முனிசிரேஷ்டர்களாலும் பிராம்மணச் சிரேஷ்டர்களாலும் ஸேவிக்கப்பட்டதும், பக்ஷிக்கூட்டங்களால் நிரம்பியதும், ஸகல ருதுக்களுடைய புஷ்பங்களாலும் அலங்கரிக்கப்பட்டதுமான பில்வாடவீ என்கிற இந்தப் புண்யக்ஷேத்திரத்தை அடைந்தார். ஸமஸ்த தேவதைகளாலும் நமஸ்காரம் செய்யத்தகுந்தவரும், அமிருதகடத்திலிருந்து உண்டானவரும், காலனுக்குக் காலனாக விளங்கியவரும் ஆகிய ஸ்ரீ சந்திரசேகரரை இந்திரன் முதலான லோகபாலகர்களும், ஸனகாதிகளானயோகிகளும், பிர்மா விஷ்ணு முதலிய தேவதைகளும் ஸ்தோத்திரம் செய்தார்கள். பிறகு விஷ்ணு, "தேவர்களுக்கெல்லாம் குருவாயும் ஒரே ஜோதிர்மயமாயும் விளங்கும் தேவரை நான் வந்தனம் செய்கின்றேன். ஸகலப்பிராணிகளுக்கும் பதியாயும், விசேஷமான காந்திபுடன் விளங்குகிற

வருமாயிருக்கிறதேவரைநான் நமஸ்கரிக்கிறேன். மூன்றுகப் பிரிக்கப்பட்ட தம்முடைய மூர்த்திகளால் ஸகலலோகங்க ளையும் பாதுகாப்பவரும், இவ்வுலகப் பற்றுதலை அறவே ஒழித்த மஹான்களான முனிவர்களால் எப்பொழுதும் ஸ்தோத்திரம் பண்ணப்பட்டவருமான தேவனை நான் வந்தனம்செய்கிறேன். உபநிடதங்களால் அறியக்கூடியவராயும் ஸகல வேதங்களுக்கும் பதியாயுமிருக்கும் தேவரின்பொருட்டு நமஸ்காரம். வேதவாக்கியங்களில் அதிகச் சிரத்தை பூண்டத்விஜர்களுக்கு வைதிகாசாரத்தில்சிரத்தைகொண்ட மூர்த்தியாய் விளங்குகிறவரும், சிறந்த ஆத்மஞானத்திற்கு விஷயமாகிறவரும், ஸாமான்யஞானத்திற்கு விஷயமாகாதவரும், பிரமாணங்களுக்கு எட்டாதவருமாயிருக்கிற ஈசுவர, உமக்கு நமஸ்காரம். பிரத்தியக்ஷம் முதலான பிரமாணங்களால் அறியமுடியாத ஸ்வரூபத்தை யுடையவராயும், மோக்ஷரூபமாயும் காரணங்களை அதிக்கிரமித்தவராயுமிருக்கிற மகேசுவரனின்பொருட்டு நமஸ்காரம். தம்மைச்சேர்ந்தவர்களாக இருந்துகொண்டு பிறர் அறியாதபடி திரவியாபகாரம் செய்கிறவர்ளுக்குப் பதியாயும், ஸகலப்பிரபுக்களுக்கும் பிரபுவாயும், வியோமகேசராயும், வியோமாவையே சரீரமாக உடையவராயும் உள்ள உங்களுக்கு நமஸ்காரம். க்ஷேத்திரங்களுக்குப் பதியாயும் அன்னங்களுக்குப் பதியாயுமிருக்கும் உங்களின் பொருட்டு நமஸ்காரம். ஸ்தோத்திரங்களுக்கும் ஸ்தோத்திரம் செய்கிறவர்களுக்கும் பதியாயும், தேவதைகள், பிதுருக்கள் இவர்களையுத்தேசித்துக் கொடுக்கப்படும் ஹவ்ய, கவ்ய ஸ்வரூபராயும், யக்ஞங்களில் யஜமானஸ்வரூபியாயும் விளங்கும் உங்களின் பொருட்டு நமஸ்காரம். பயங்கரமான ரூபத்தையுடையவரும் தக்ஷருடைய யாகத்தை நாசம் செய்த சரீரத்தையும், பைரவர் என்ற பெயரையும் உடையவருமான உங்களின் பொருட்டு நமஸ்காரம். மிக

வும் பராக்கிரமசாலியாயும் சூரர்களுக்குப்பதியாயும் அக்ஞானத்தை நாசம் செய்து விக்ஞானமென்னும் பிரகாசமான தீபத்தைக் கொடுப்பவராயும், வீரபத்திரனென்றும் பெயருடையவராயும் உள்ள உங்களின்பொருட்டு நமஸ்காரம். அணுவுக்கணுவாயும், மகத்திற்கு மகத்தாயும், ஸத்ரூபத்தைத்தரிப்பவராயுமுள்ள உங்களின்பொருட்டு நமஸ்காரம். சராசரஸ்வரூபங்களானஉலகங்களைச்சிருஷ்டிக்கிறவரான நீர்ஒருவர்தான் எல்லாவற்றிற்கும் காரணமாக ஆகிறீர். ஸர்வஜகத்திற்கும் ஆச்சர்யபூதராயும், பிராணன் இந்திரிய ஸமூகங்கள் இவைகளின் ஸ்வரூபமாயும், விளங்கும் நீர் எங்கும் ஸஞ்சரிக்கிறீர். தங்களையே ஸச்சிதானந்தரூபராயும், ஜகத்திற்குப் பிராணஸ்வரூபராயும், எல்லாதேவதைகளுக்கும் மேலான தேவதையாயும் கூறுகின்றார்கள். எப்பொழுதும் தமது உள்ளத்தால் ஆத்மஸ்வரூபத்தையே தியானித்துக்கொண்டிருக்கும் யோகிகள் உம்மையடைந்து மிகவும் கோரமான ஸம்ஸாரபந்தத்திலிருந்தும் விடுபட்டு முக்தர்களாகிறார்கள். ஹே மகேசுவர! நாங்களனைவரும் ஸகல ஜகத்திற்கும பிராண பூதராயும், ஆதியற்றவராயும், ஸகல குணங்களையும் தாண்டினவராயும், வேதங்களின் ஸாரபூதராயும், நித்யராயும் விளங்கும் உம்முடைய பாதமூலத்தைச் சரணமாக அடைந்தோம். பூமிக்கு ஏற்பட்டிருக்கும் அதிகபாரத்தால் மிகவும் பயந்தவர்களாக ஆகிறோம். தாங்கள் யமனை ஸம்ஹாரம் செய்து விட்ட படியால் ஸ்தாவரம், ஜங்கமம் என்ற ஸகலமும் நாசத்தையடைய வேண்டிய காலத்தில் கூட நாசத்தை யடையாமலிருக்கின்றன. தங்களுடைய பக்தர்கள் முடிவுக் காலத்தில் மிகவும் பக்தியால் உங்களைப்போற்றி உங்களுடைய சரணும் போஜத்தை யடைகிறார்கள். ஹே விபோ! இந்த ஜகத்தைப் பரிபாலிக்க வேண்டி முந்தியே உம்மால் பிரும்மா, விஷ்ணு, யமன் இம்மூவர்களும் நியம

னம் செய்யப்பட்டிருக்கிறார்கள். இம்மூவர்களுள் யமனில்லாவிடில் தேவதாஸ்வரூபியான பூமியானவள் சேற்றிலாழ்ந்த கஜத்தைப்போல மிகவும் கஷ்டப் படுகிறாள். ஹே பிரபோ! ஸகல உலகங்களுக்கும் தாங்கள் நாதராயிருக்கும் பொழுது அகாலத்தில் பிரளயம் எப்படி ஏற்படலாம்? ஹே தேவ! தங்களுடைய ஆக்ஞையை அனுஷ்டிப்பவர்களும், சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரமென்ற இம்மூன்று கர்மாக்களையும் முறையே செய்கிறவர்களுமான பிரும்மா, விஷ்ணு, யமன் என்ற இம்மூவர்களும் அவரவர்களுடைய காரியங்களைச் செய்துகொண்டிருக்கட்டும். 'உலகில் பிராணிகளுக்கு அவைகளின் கர்மவசத்தால் எவ்வளவு ஆயுள் ஏற்பட்டிருக்கின்றதோ அவ்வளவையு மனுபவித்துப் பிறகு அவை மறு ஜன்மாவை யடையத் தகுந்தன' என்பது உம்மாலேயே கற்பிக்கப் பட்டிருக்கின்றது. ஹே! கருணாநிதியான அமிருதகடேசுவர, உம்மால் முந்தி ஏற்படுத்தப் பட்ட விதியை இப்பொழுதும் நடைபெறும்படி செய்யும்" என்று பிரார்த்தித்தார்.

இவ்விதம் கூறும் ஸ்ரீ மகாவிஷ்ணுவினுடைய அபிப்பிராயத்தை யறிந்த பில்வவனேசுவரரான ஸ்ரீ பரமேசுவரர் பிரசன்னராகி விஷ்ணு முதலான தேவர்களுக்கு எதிரில் தோன்றினார். ஹே முனீசுவரர்களே, ஆச்சர்யமான ஸ்வரூபத்தை யுடைவரும், ஜடாதரரும், புலித்தோலை ஆடையாகத்தரிப்பவரும், உமையோடு கூடியவரும், ஒரேஸமயத்தில் கோடிசந்திரன் உதயமானதுபோல் மிகவும் சீதளமாயிருப்பவரும், அழகுவாய்ந்த திருமேனியை யுடையவருமான அந்த அமிர்தகடேசுவரரை அதிக புண்யசாலிகளான அவர்கள் வந்தனம் செய்தார்கள். பிறகு யமனை உயிருடன் கூடியவனாகச் செய்ய வேண்டுமென்ற இவர்களுடைய விக்ஞாபனத்தையறிந்த ஸ்ரீ சந்திரசேகரர் மறுபடியும் எமனுக்

குத் தாமாகவே ஜீவனைக்கொடுத்தார். ஸ்ரீ பரமேசுவரனுடைய அனுக்கிரக பலத்தால் தக்ஷிணதிக்கிலிருந்தும் யமனும் ஜீவனுடன் எழுந்திருந்தான். இதைக் கண்ணுற்ற விஷ்ணு முதலான தேவர்கள் தாங்கள் வந்த காரியம் பூர்த்தியாய் நிறைவேறியதென்று மிகவும் சந்தோஷங்கொண்டு அவரவர்கள் தம் தம் ஸ்தானத்தை யடைந்தார்கள். ஈசுவரானுக்கிரகத்தால் ஜீவித்தெழுந்திருந்த யமன் சிவபக்தர்களுக்கிருக்கும் மகிமையை நன்கறிந்து 'தன்னால் மஹேசுவர பக்தர்களுள் மிகவும் சிறந்தவரான மார்க்கண்டேயரிடத்தில் செய்யப்பட்ட அபராதத்தை மன்னிக்கவேண்டும்' என்று ஸ்ரீ சங்கரரிடம் பிரார்த்தித்தான். அவரிடம் பிரார்த்தித்து மகேசனிடத்தில் ஏகாக்கிரமான சித்தத்துடன் மிகவும் கொடூரமான தவத்தைச் செய்ய ஆரம்பித்தான். யமனுடைய தவத்தால் சந்தோஷத்தை யடைந்த நெற்றியில் கண்படைத்தவரான ஸ்ரீ பரமேசுவரர் யமனிடத்தில் கருணைகொண்டு மதுரமான வாக்கியத்தால் "ஹே மிருத்யோ! உனக்கு மங்களமுண்டாகட்டும். உனக்கிஷ்டமான வரத்தை யளிக்கவேண்டி நான் இங்கு வந்திருக்கிறேன். வேண்டியதைக் கேள். ஹே! யமனே, முந்தியே என்னால் உனக்கு இந்த அதிகாரமானது கொடுக்கப்பட்டது. பின்னும் உனது மனதிலிருக்கும் விருப்பத்தைக் கேட்டுக்கொள். எப்பொழுதும் நான் பக்தர்களுக்கு அதீனனாயிருந்துகொண்டு அவர்களின் இஷ்டத்தைக் கொடுக்கிறவன். என்னுடைய பக்தர்கள் சர்வலோகங்களிலும் பயமின்றி அவர்களிஷ்டப்படி ஸஞ்சரிப்பார்கள். எவரெவர்கள் பக்தியுடன் பத்திரம், புஷ்பம் இவைகளால் என்னைப் பூஜிக்கிறார்களோ அவரவர்களுக்கு வேண்டிய இஷ்டத்தை என்னுடைய பத்னியோடுகூடகொடுக்க எப்பொழுதும் சித்தனாயிருக்கிறேன்" என்று கூறியருளினார். இவ்வாறு சிவபெரு

மானின் வசனத்தைச் செவியிற்கொண்ட யமன் மிகவும் சந்தோஷத்தையடைந்து ஸகல லோகங்களிலும் பிரசித்தியடையவேண்டி அடியில்வரும் சிறந்த வரத்தைக்கேட்கலானன். அது, "மிகவும் பாபியாயும் கெட்டவனுயுமிருக்கும் எனக்குக் கருணையால் ஸகல தேவதைகளுக்கும் ஈசனுன சங்கரன் பிரத்யக்ஷமாக எதிரில் தோன்றியிருக்கிறூர். என்ன ஆச்சர்யம்! ஹே ஸ்வாமின், தங்களுடைய பாதாம்புஜ ஸேவையால் இப்பொழுது நான் தன்யனுகிறேன். தங்களுடைய பக்தரான மார்க்கண்டேயரைப்பாதுகாக்க வேண்டி உம்மால் முந்தி நான் அடிக்கப்பட்டேன். அப்படி அடிக்கப்பட்ட எனக்கு மறுபடியும் பிராணனைக் கொடுத்தபடியால் மறுபடியும் பிரசித்தி ஏற்படட்டும். என்னுடைய சிரஸும், என்னுடைய சரீரகண்டமும் தங்களுடைய பாதத்தினுடைய உதையால் விழும்படிச் செய்யப்பட்டதனுல் அந்த சரீரமானது மிகவும் பரிசுத்தமாக ஆகின்றது. ஹே மஹாதேவ! என்னுடைய இரண்டு அங்கங்களும் விழுந்த இரண்டு பள்ளங்களும் இரண்டு தீர்த்தங்களாக ஆக வேண்டும். சிரஸ் விழுந்த பள்ளத்திலிருக்கும் தீர்த்தத்திற்குக் 'கபாலதீர்த்தம்' என்றும், காயம் விழுந்த இடத்திலிருக்கும் தீர்த்தத்திற்குக் 'காயதீர்த்தம்' என்றும் பிரசித்தி ஏற்பட்டு இவ்விரண்டு தீர்த்தங்களிலும் ஸ்நானம் செய்கிறவர்களுக்கு 'மிருத்யு பயமில்லை' என்றும் வரம் தந்தருளவேண்டும்" என்பது. இவ்விதம் யமனுல் பிரார்த்திக்கப்பட்ட அம்பிகாபதியான பகவான் அவனுடைய பிரார்த்தனையை 'அப்படியே ஆகட்டும்' என்று பூர்த்தி செய்தார். யமனும் இஷ்டமான வரத்தைப் பெற்றபடியால் மிகவும் சந்தோஷத்தையடைந்து தனது நகரமான ஸம்யமனியை யடைந்தான். எப்பொழுதும் சிவபக்தி உள்ளவனுகவே இருந்து கொண்டு

முன்போலத் தனது வேலையை நடாத்தி வந்தான். யம னுல் அந்தந்த ஸமயங்களில் அவன் காரியமானது சரியாய் நடத்தப்பட்டு வந்தபடியால் பல ஜனங்கள் பூமியிலிருந்தும் ஸம்ஹாரம் செய்யப்பட்டார்கள். ஜனங்களின் பாரம் குறை யவே பூமியும் முன்போல் கஷ்டமில்லாதவளாக ஆனுள். சராசராத்மகமான இந்த ஜகத்தும் முன் போலிருந்தது. சிவனுடையவும்,சிவபக்தர்களுடையவுமான மாஹாத்மியமா னது மிகவும் பெருமைவாய்ந்தது. கோடி வருஷங்கள் சிரமப்பட்டாலும் இந்த மாஹாத்மியமானது ஒருவராலும் கூறவியலாதது. மிகவும் சிறந்ததான இந்தச் சரித்திரத்தைப் படிப்பவர், கேட்பவர் முதலிய யாவரும் யமலோகத்தைய டைய மாட்டார்கள். யமன் என்கிற வார்த்தைகூட அவர் கள் காதில் விழாது" என்று கூறி இந்த அத்தியாயத்தைப் பூர்த்தி செய்தார்.

இவ்விதம் ஸ்காந்த மென்கிற மகாபுராணத்தில் ஸப்தாரண்ய ப்ரசம்ஸையில் பில்வாரண்ய மகாத்மிய மென்கிற 164ஆவது அத்தியாயம் முடிவுபெற்றது. சுபம்!

---

## அத்தியாயம் 6.

மறுபடியும் ரிஷிகள் ஸூத புராணிகரைப் பார்த்துச் "சகலபாபங்களேயும் போக்கும் திறமை வாய்ந்த சிவன், சிவ பக்தர்கள் இவர்களுடைய மகிமையானது தங்களால் மு றையே நன்கு கூறப்பட்டது. சிவனைப் பூஜிக்க வேண்டிய முறையையும் விரிவாய்த்தாங்கள் போதிக்கவேண்டும்என்று பல தேவர்களும் முனிவர்களும் வேண்டுகிருர்கள். தாங் கள் சொல்லும் பூஜாக்கிரமம் எங்ஙனம் செய்தால் ஸ்ரீ பர

மேசுவரன் பிரஸாதத்தை யளிப்பாரோ அவ்விதம், மிகவும் சிறந்ததாக இருக்கவேண்டும்." என்று பிரார்த்தித்தார்கள். இவர்களின் பிரார்த்தனைக்கு இணங்கி ஸூதர் கூறுகின்றதாவது:—

"ஹே த்விஜச் சிரேஷ்டர்களான ரிஷிகளே! உங்களால் அறிந்துகொள்ள வேண்டுமென்று விரும்பப்பட்ட விஷயம் மிகச்சிறந்ததே. அதைப் பக்தியுடன்கேட்கவேண்டும். மிருத்யுவை ஜயிக்க வேண்டியதற்காக மார்க்கண்டேயரால்சிவபெருமானைக்குறித்து யாதொரு பூஜையானது செய்யப்பட்டதோ அதை இப்பொழுது உங்களுக்கு முறையே கூறுகின்றேன். ஹே! முனிச்சிரேஷ்டர்களே அதைக் கேட்ட மாத்திரத்தால் ஸகல மிருத்யுக்களும் தாமாகவே விலகிவிடும். மார்க்கண்டேயரானவர் பிராம்ம முகூர்த்தத்திலெழுந்திருந்து விடியற்காலத்தில் செய்ய வேண்டிய கிரியைகளை முடித்துக்கொண்டு அமிர்த குண்டத்தில் சாஸ்திர விதிப்படி ஸ்நானம் செய்து சுத்தமான கௌபீனத்தையுடையவரும், நிர்மலமான யக்ஞோபவீதத்தோடு கூடியவரும், மிகவும் ஆசாரத்தோடு கூடியவருமாக இருந்து கொண்டு விதிப்படி அந்த ஸமயத்தில் செய்ய வேண்டிய ஸந்தியோபாஸ்தியைச்செய்தார். பிறகு கிழக்கு திக்கில் நன்கு விளங்கும் சூரியபகவானைத் துதித்துப் பிர்ம யக்ஞத்தையும் செய்தார். இவ்விதம் தமது ஆன்ஹிகங்களை முடித்துக்கொண்டு ஸமித், பஸ்மா இவைகளால் பிரகாசிக்கின்றசிரஸ்ஸையுடையவராயும்,பார்ப்போர்களுக்கு விசேஷ திருப்தியை யுண்டுபண்ணுகிறவராயும் இருக்கிற அம்முனிவரானவர் பெரியோர்களையும், சந்நியாஸிகளையும், வேதாந்த சாஸ்திரத்தின் தத்துவத்தை யறிந்தவர்களையும், வந்தனம் செய்து அதிக குருபக்தியோடு அவர்களின் ஆசீர்வாதத்தைப் பெற்றுப் பூஜைக்கு வேண்டிய புஷ்பங்களைச்

சம்பாதிக்க முயன்றார். புன்னாகம், நாகபுஷ்பம், மகிழம் புஷ்பம், சம்பகபுஷ்பம், அசோகம், மாந்துளிர், மாலதீகுஸுமம், நாயுருவி, கருஊமத்தம்புஷ்பம் ஹரிபோபத்திரம் பிருங்கராஜபத்திரம், குசம், தும்பைப்புஷ்பம், அறுகம்புல் ஸுகோளகம், நிர்குண்டி, கபித்தம், ஹரிபில்வம் முதலிய புஷ்பங்களைச் சுத்தராகவும் சிரத்தையுள்ளவராகவும் இருந்து கொண்டு சம்பாதித்தார்; வேதவாக்கியங்களால் பகவானை ஸ்தோத்திரம் செய்து பிராதக்காலத்தில் சிவலிங்கத்திற்கு அர்ச்சனம் செய்தார். மத்தியான காலத்தில் மறுபடியும் ஸ்நானம்செய்து அனுஷ்டானங்களைமுடித்துத்தேவதைகள் ரிஷிகள் பித்ருக்கள் இவர்களையும் பக்தியுடன் ஆராதித்தார்; மிகவும் நியமத்துடன் கூடிய முனிவர்களோடுகூட வேத பாராயணத்தையும்செய்தார்; சம்புவினுடையபிரஸாதத்தை யடையவேண்டித் தம்மால் செய்யப்பட்ட சகல கர்மானுஷ்டானங்களையும் அவர்களுக்கு அர்ப்பணமாகச் செய்தார்; மறுபடியும் சாயங்காலத்தில் முன்போல் ஸ்நான அனுஷ்டானங்களை முடித்துக்கொண்டு மௌனவிருதம்பூண்டு பிஞ்சிலா என்ற விருக்ஷத்திலிருந்து ஆயிரத்தெட்டு மலர்களையெடுத்துச் சுத்தமான தீர்த்தத்தால் அலம்பி, கஸ்தூரி முதலிய வாஸனைத்திரவியங்களைச் சேர்த்து ஸ்ரீமகாவிஷ்ணுவால் சொல்லப்பட்ட சிவஸகஸ்ரநாமத்தால் தம்மிடம்பிருத்புவராமலிருக்க வேண்டிச் சிரத்தையாய் நித்திய பூஜையைச் செய்தார். ராத்திரிகாலத்தில் பிஞ்சிலா புஷ்பங்களில் ஒரு புஷ்பத்தை யாவது எவன் பரமசிவத்தின் சிரஸ்ஸில் அர்ப்பணம் செய்கிறானோ ஹே மகரிஷிகளே, அவனுக்கு அதனாலேற்படும் புண்ணியத்தைக் கூறுகிறேன் கேளுங்கள். 'ஆயிரம் ஸுவர்ண புஷ்பங்களைக்காட்டிலும் ஒருரத்தினபுஷ்பம்சிறந்தது. ஆயிரம் ரத்ன புஷ்பங்களைக்காட்டிலும் ஒரு நீலோத்பலம் மேலானது. கோடி நீலோத்பலபுஷ்பங்களால் ஸ்ரீ சந்திரசே

காரைப்பூஜித்து அதனல் யாதுபயனடையப்படுகின்றதோ அப்பயனே ராத்திரி பூஜையில் பிஞ்சிலையினுடைய மிகவும் சிறந்ததான ஒரு மலரால் தேவர்களுக்கெல்லாம் ஈசனும், சகல போகங்களையுமளிப்பவராயும் விளங்கும் ஸ்ரீபரமசிவத்தைப் பூஜிப்பதனலடையப்படுகிறது. அங்ஙனம் பூஜிப்பவன் மிருத்யுபாசத்தையும் தள்ளிவிட்டுக் கணங்களுக்கெல்லாம் பதியாயிருக்கும் தன்மையையுமடைகிருன்' என்று முன் ஒருவரால் செய்யப்பட்ட இந்த விருத்தாந்தத்தை மிருகண்டு புத்திரரானவர் அறிந்தார். பிஞ்சிலே என்ற அந்தப்புஷ்பலதையை ஸுதாகடேசுவரருடைய ஆலயத்திற்கு நைருதிதிக்கில் தாமாகப் பிரதிஷ்டை செய்தார்; அந்தஅந்த ஸமயங்களில் அதற்குச் செய்யவேண்டிய கைங்கர்யங்களைச் செய்து அதை விருத்திபண்ணிஞர்; அதிலிருந்தும் உண்டான புஷ்பங்களை எடுத்து அவைகளால் ஸ்ரீ அமிருதகடேசுவரரான பரமேசுவரனைப் பூஜைசெய்தார். அவ்விதம் செய்யப்பட்ட பூஜையின் வைபவத்தால் ஸுதாகும்பத்திலிருந்தும் உண்டான பகவான் மார்க்கண்டேயரிடத்தில் மிகவும் பிரீதியையடைந்து அவரைஸம்காரம்செய்யவேண்டுமென்று மிருத்யு வருகிற பரியந்தம் அந்த இடத்திலேயே மௌனமாக இருந்துகொண்டு மிருத்யு வந்தவுடன் மிகவும் கோபத்தையடைந்த ஹரர் யமனைச்சம்காரம் செய்துவிட்டு மார்க்கண்டேயருக்கு வேண்டிய வரனையுமளித்தார். ஆகையால் அந்தப் பிஞ்சிலாபுஷ்பமானது உலகிலுள்ள புஷ்பங்களுக்கெல்லாம் மிகவும் உத்தமமானது. ஹே பிராம்மணர்களே, மார்க்கண்டேயரால் சுத்தமாயும், துவாரமில்லாமலும் புழுக்களில்லாமலும்விளங்கும்இந்தப் புஷ்பங்களால் முந்திச்செய்யப்பட்ட பூஜாக்கிரமத்தையும், அந்தப் பூஜையால் சந்தோஷத்தையடைந்த ஸ்ரீமகேசுவரனுல் அவருக்குக் கொடுக்கப்பட்ட நித்தியத்துவத்தையும் சுருக்கமாக நான்உங்களுக்குத்

தெரிவித்தேன். இந்தப் பூஜாக்கிரமாத்தியாயத்தை மனுஷ்யச் சிரேஷ்டர்களான எவர்கள் படிக்கிறார்களோ அவர்களுக்கு நிச்சயமாய்ச் சிவபூஜையின் பலம் ஏற்படும். சர்வசித்தியையும் உண்டுபண்ணுகிறதான சாசுவதமான சிவபக்தியும் அவர்களுக்கு உண்டாகும். மிகவும் அழகாயும் பரமேசுவரனுக்கு மிகவும் பிரியமாயுமிருக்கிற இந்த அத்தியாயத்தை எவர்கள் பக்தியுடன் ஒவ்வொருநாளும் ஜபிக்கிறார்களோ அவர்களுக்கு மிருத்யுவென்றுசொல்லப்படும் காலனிடத்திலிருந்தும் பயமானது ஒருநாளுமுண்டாகாது. யமனால் செய்யப்படும் பீடையும் அவர்களுக்கு ஒரு ஸமயமும் ஏற்படாது. ஹே பிராம்மணர்களே, மார்க்கண்டேயர் பூஜித்தது முதற்கொண்டு இந்த இடத்தில் மிருத்யுவை நாசம் பண்ணுகிறதாயும், எப்பொழுதும் புஷ்பத்தோடு கூடியதாயுமுள்ள இந்தப் பிஞ்சிலாலதையானது விளங்குகின்றது. அந்தப் புஷ்பங்களாலேயே பகவானையர்ச்சிக்கவேண்டும். மிருகண்டுபுத்திருடைய பிஞ்சிலாரண்யமென்று ஒருசிறந்த பெயரும் இதற்குண்டு." என்றுகூறி அத்தியாயத்தை முடித்தார்.

இவ்விதம் ஸ்காந்தமென்கிற மகாபுராணத்தில் ஸப்தாரண்ய ப்ரசம்ஸையில் பில்வாரண்ய மகாத்மிய மென்கிற 165ஆவது அத்தியாயம் முடிவுபெற்றது. சுபம்!

---

## அத்தியாயம் 7.

பின்னும் ஸூதமகரிஷியைப்பார்த்து ரிஷிகள் "ஹே கருணாநிதியான ஸூதமுனிவரே, இந்த க்ஷேத்திரத்தினுடைய மகாத்மியத்தை விரிவாய்த் தாங்கள் எங்களுக்குப்

காரைப்பூஜித்து அதனால் யாதுபயனடையப்படுகின்றதோ அப்பயனே ராத்திரி பூஜையில் பிஞ்சிலேயினுடைய மிகவும் சிறந்ததான ஒரு மலரால் தேவர்களுக்கெல்லாம் ஈசனும், சகல போகங்களையுமளிப்பவராயும் விளங்கும் ஸ்ரீபரமசிவத்தைப் பூஜிப்பதனாலடையப்படுகிறது. அங்ஙனம் பூஜிப்பவன் மிருத்யுபாசத்தையும் தள்ளிவிட்டுக் கணங்களுக்கெல்லாம் பதியாயிருக்கும் தன்மையையுமடைகிறான்' என்று முன் ஒருவரால் செய்யப்பட்ட இந்த விருத்தாந்தத்தை மிருகண்டு புத்திரரானவர் அறிந்தார். பிஞ்சிலே என்ற அந்தப்புஷ்பலதையை ஸ்ரீ அமிர்தகடேசுவரருடைய ஆலயத்திற்கு நைருதிதிக்கில் தாமாகப் பிரதிஷ்டை செய்தார்; அந்தஅந்த ஸமயங்களில் அதற்குச் செய்யவேண்டிய கைங்கர்யங்களைச் செய்து அதை விருத்திபண்ணினார்; அதிலிருந்தும் உண்டான புஷ்பங்களை எடுத்து அவைகளால் ஸ்ரீ அமிருதகடேசுவரரான பரமேசுவரனைப் பூஜைசெய்தார். அவ்விதம் செய்யப்பட்ட பூஜையின் வைபவத்தால் ஸ்ரீ அமிர்தகும்பத்திலிருந்தும் உண்டான பகவான் மார்க்கண்டேயரிடத்தில் மிகவும் பிரீதியையடைந்து அவரைஸம்காரம்செய்யவேண்டுமென்று மிருத்யு வருகிற பரியந்தம் அந்த இடத்திலேயே மௌனமாக இருந்துகொண்டு மிருத்யு வந்தவுடன் மிகவும் கோபத்தையடைந்த ஹரர் யமனைச்சம்காரம் செய்துவிட்டு மார்க்கண்டேயருக்கு வேண்டிய வரனையுமளித்தார். ஆகையால் அந்தப் பிஞ்சிலாபுஷ்பமானது உலகிலுள்ள புஷ்பங்களுக்கெல்லாம் மிகவும் உத்தமமானது. ஹே பிராம்மணர்களே, மார்க்கண்டேயரால் சுத்தமாயும், அவாரமில்லாமலும் புழுக்களில்லாமலும்விளங்கும்இந்தப் புஷ்பங்களால் முந்திச்செய்யப்பட்ட பூஜாக்கிரமத்தையும், அந்தப் பூஜையால் சந்தோஷத்தையடைந்த ஸ்ரீமகேசுவரனால் அவருக்குக் கொடுக்கப்பட்ட நித்தியத்துவத்தையும் சுருக்கமாக நான்உங்களுக்குத்

தெரிவித்தேன். இந்தப் பூஜாக்கிரமாத்தியாயத்தை மனுஷ்யச் சிரேஷ்டர்களான எவர்கள் படிக்கிறார்களோ அவர்களுக்கு நிச்சயமாய்ச் சிவபூஜையின் பலம் ஏற்படும். சர்வ சித்தியையும் உண்டுபண்ணுகிறதான சாசுவதமான சிவபக்தியும் அவர்களுக்கு உண்டாகும். மிகவும் அழகாயும் பரமேசுவரனுக்கு மிகவும் பிரியமாயுமிருக்கிற இந்த அத்தியாயத்தை எவர்கள் பக்தியுடன் ஒவ்வொருநாளும் ஜபிக்கிறார்களோ அவர்களுக்கு மிருத்யுவென்றுசொல்லப்படும் காலனிடத்திலிருந்தும் பயமானது ஒருநாளுமுண்டாகாது. யமனால் செய்யப்படும் பீடையும் அவர்களுக்கு ஒரு ஸமயமும் ஏற்படாது. ஹே பிராம்மணர்களே, மார்க்கண்டேயர் பூஜித்தது முதற்கொண்டு இந்த இடத்தில் மிருத்யுவை நாசம் பண்ணுகிறதாயும், எப்பொழுதும் புஷ்பத்தோடு கூடியதாயுமுள்ள இந்தப் பிஞ்சிலாஸதையானது விளங்குகின்றது. அந்தப் புஷ்பங்களாலேயே பகவானையர்ச்சிக்கவேண்டும். மிருகண்டுபுத்திரருடைய பிஞ்சிலாரண்யமென்று ஒருசிறந்த பெயரும் இதற்குண்டு." என்றுகூறி அத்தியாயத்தை முடித்தார்.

இவ்விதம் ஸ்காந்தமென்கிற மகாபுராணத்தில் ஸப்தாரண்ய ப்ரசம்ஸையில் பில்வாரண்ய மகாத்மிய மென்கிற 165ஆவது அத்தியாயம் முடிவுபெற்றது. சுபம்!

---

## அத்தியாயம் 7.

பின்னும் ஸூதமகரிஷியைப்பார்த்து ரிஷிகள் "ஹே கருணாநிதியான ஸூதமுனிவரே, இந்த க்ஷேத்திரத்தினுடைய மகாத்மியத்தை விரிவாய்த் தாங்கள் எங்களுக்குப்

போதிக்கவேண்டும். இந்தப் பில்வாரண்யமென்பது எவ்வளவு விஸ்தீர்ணமுடையது? இங்குள்ள தீர்த்தங்களுடைய மகிமையையும் மறுபடியும் எங்களுக்கு வர்ணிக்கவேண்டும். கேட்பதற்கு மதுரமாயிருப்பதால் இந்தப் புராணஅமிர்தத்தைக் கேட்டுக்கேட்டு மறுபடியும் இக்கதாமிருதத்தைச் சிரவணம் செய்யவேண்டுமென்ற விருப்பம் அதிகம் உண்டாகின்றது. உங்களுடைய குரு 'ரோமஹர்ஷணர்' என்ற பெயரைத் தங்களுக்குக்கொடுத்திருக்கிறார். ரோமஹர்ஷணர் (தம்மால் கூறப்படுங் கதையைக் கேட்போர்களின் சரீரத்தைப் புளகாங்கிதமாய்ச் செய்யும் சக்திவாய்ந்தவர்.) என்கிற பெயருக்குற்றவாறு ஹே தாத, கிருபைசெய்து தங்களுடைய கதையால் எங்களுக்குச் சந்தோஷத்தை யுண்டு பண்ணவேண்டும்" என்று வேண்டினார்கள்.

இம்மொழியைச் செவிபுற்ற ஸூதர் கூறுகின்றார். "ஹே மகரிஷிகளே, தீர்த்தத்தைப் பற்றிய உத்தமமான ஓர் இதிகாஸம் சொல்லப்படுகின்றது. நன்கு கவனிக்க வேண்டும். வைடூரிய ரத்னங்களை விருத்திசெய்கிறவனான விடூரதன் எனப் பெயர்கொண்ட ஒருவனிருந்தான். அவனுடைய பத்னிக்குச் சீலவதி எனப்பெயர். மிகவும் புண்ணியசாலிகளான இவ்விருவர்களும் கௌதமீ தீரத்தையடைந்து அதிக தக்ஷிணையையுடைய பல வேள்விகளை நடாத்திப் பிராம்மண போஜனத்தையும் செய்வித்து யாககாலத்தில் வெவ்வேறாகப் பல தானங்களையும் செய்தார்கள். மறுபடியும் விச்வஜித் எனப் பெயர்பூண்ட உத்தமமான ஒரு யக்ஞத்தையும் அந்த விடூரதன் செய்தான். அந்த யாகத்தினுடைய முடிவில் அனேகம் பிராம்மணர்களுக்குச் சிறந்த ஸன்மானங்களைச்செய்து மற்றுமுள்ளோர்களுக்கும் தானங்களைச் செய்ய வேண்டித் தனது சகோதரனும் பூமிக்கு

அதிபதியாயுமிருக்கிற பிரமிதி என்பவனுக்கு ஆக்ஞைசெய்தான். அந்தப் பிரமிதியுஞ் சகலமானப் பிராம்மணர்களையும் ஆதரவுடனழைத்து நமஸ்கரித்து அவர்களுடைய சந்தோஷத்தின் பொருட்டு அனேக வஸ்திரங்களையும், அலங்காரங்களையும், விசித்திரமான முத்தாஹாரங்களையும், அதிக தனங்களையும் கொடுத்து; அவ்வாறே ஸகலமான ஜனங்களுக்கும் விசேஷமாக அர்ப்பணம் செய்து க்ஷணகாலத்தில் கோசகிருகத்தைச் சூன்யமாகச் செய்துவிட்டான். அந்தச் சமயத்தில் பார்க்கவவம்சத்தில் உண்டானவரும், சகலவைதிக அனுஷ்டானங்களுக்கும் இருப்பிடமாயும், ஜடாவல்கலத்தோடுகூடியவராயும், விச்வாவஸு என்று பிரசித்தியடைந்தவருமான ஒருவேதியர் இங்குநடக்கும் தானவைபவத்தைப் பார்த்துப் பிரமிதியிடம் வந்து அக்னி ஹோத்திரத்திற்காகச் சிறந்த ஒரு பசு தமக்கு வேண்டுமென யாசித்தார். உடனே அந்தப்பிரமிதியும் நன்கு அலங்கரிக்கப்பட்ட கபிலவர்ணமான ஒருபசுவை அவருக்கு அர்ப்பணம் செய்தான். அவனால் கொடுக்கப்பட்ட அந்தக் கோவை அந்த விசுவாவஸு என்பவர் திருடமான கயிற்றால் கட்டி அந்தக்கயிற்றைத் தமதுகையில் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டு இருப்பிடம் சென்றார். செல்லும் காலத்தில் ஒரு கூட்டத்திலிருந்தும் தனியாய்ப்பிரிந்து விடப்பட்ட அந்தப்பசு அம்முனியை வேகமாக இழுத்துத் தள்ளிவிட்டுச் சீக்கிரமாகத் திரும்பித் (தான்மாத்திரம்ஓடி)த் தனது கோஷ்டியில் வந்து சேர்ந்து விட்டது. அந்த முனிவர் ஸாதுவில்லாததும், மிகவும் கெட்ட ஸ்வபாவமுடையதுமான அந்தக்கோவைத் தமக்குக் கொடுத்ததால் யாதொரு பயனுமேற்படவில்லையென்றறிந்து மிகவும் கோபத்துடன் பிரமிதி என்ற அந்த அரசனைக்குறித்து "அந்தராஜா கோவின் குணதோஷங்களை நன்கறியாமல் துஷ்டையான கோவைப் பிராம்மணரை அவ

மானம் செய்ய வேண்டுமெனக்கருதி கெட்ட புத்தியுடன் கொடுத்தபடியால் சீக்கிரமாகவே தோஷமுள்ள சரீரத்தை உடையவனாகவும்,(அதாவது வெள்ளைக்குஷ்டமென்கிற ரோகத்துடன் கூடினவனாகவும்) ஒரு கர்மாவிற்கும் யோக்கியதையில்லாதவனாகவும் ஆகப்போகிறான்." என்று சபித்துவிட்டுக் கோவையும் விட்டுவிட்டுத் தமது ஆச்ரமத்திற்குச் சென்றார். அதற்குப் பிறகு பிராம்மண சாபத்தால் பீடிக்கப்பட்ட அவ்வேந்தன் அதேக்ஷணத்தில் 'துச்சர்மா' (வெள்ளைக்குஷ்டம்) என்ற ரோகத்தையடைந்து மிகவும் துக்கமுடையவனானான். பிராம்மண சாபத்தால் ஏற்பட்ட ரோகத்தையடைந்த அந்தப்பிரபிரு ஒருவிதமான கர்மாவிற்கும் அருகமில்லாதவனாய்விட்டான். "மகரிஷியினுடைய மகத்தான இவ்வித சாபம் எனக்கு நேர்ந்துவிட்டதே. இந்தப்பிரும்ம சாபத்திலிருந்தும் எனது ஆத்மாவை எப்படி விடுவிப்பேன்" என்று துக்கத்துடன் அதிகக் கவலையையடைந்து தனது குலகுருவையடைந்து வந்தனம் செய்து பிராம்மண சாபத்தாலுண்டான தன்னுடைய அவஸ்தையைத் தெரிவித்தான். எல்லா விஷயங்களையும் நன்கறிந்தவரும், 'தீர்க்கஜீவி' எனப் பெயர் வாய்ந்தவருமான அவ்வரசனுடைய குலகுரு சாஸ்திரங்களை நன்கு விசாரித்துப் பிரும்மசாபத்தாலேற்பட்டிருக்கும் ரோக நிவர்த்திக்கு யோக்கியமாகச் சாஸ்திரங்களில் கூறப்பட்ட பிராயச்சித்தத்தை அடியில் வருமாறு தமது சிஷ்யனுக்குக் கூறத் தொடங்கினார்.

*தீர்க்கஜீவி:*— மிகவும் சாதுவான ஹே! அரசனே, மிகவும் சிறந்த என்னுடைய வாக்கியத்தைச் சிரத்தையுடன், கேள். சகல புராணங்களாலும் கூறப்பட்டதாயும் மூவுலகிலும் பிரசித்தி பெற்றதாயும், பலவிதமான மிருகங்களா

லும். பக்ஷிகளாலும் நிறைந்ததாயும், மஹான்களான மஹரி ஷிக்கூட்டங்களுக்கு வாஸஸ்தானமாயும், மிகவும் புண்யபூமி யாயும், அங்கு நடைபெறும் அதிகமான அக்னிஹோத்திர அநுஷ்டானத்திலிருந்தும் உண்டான மேகம்போன்ற புகை களைப் பார்த்து மயில்கள் நர்த்தனம் செய்கின்றதாயும், தண் டம், கமண்டலு, அஜினம் முதலியவைகளோடு கூடிய முனி புத்திரர்களால் அதிகமாகப் பிரகாசிக்கின்றதாயும், எப்பொ ழுதும் அங்கு நடக்கும் வேதாத்தியயன சப்தங்களால் ஒலி யுடன் கூடியதாகச் செய்யப்பட்ட திருமுகங்களையுடையதா யும், மிகவும் பரிசுத்தமான வஸ்துக்களுக்குள் உத்தமமாயும், ஒரு யோஜனை அகலமும், ஒரு யோஜனை நீளமும் உள்ளதா யும், எப்பொழுதும் பலபிராணிகளுக்கு உபகாரத்தைச் செய்கின்ற சிறந்த விருக்ஷங்களோடும் பழங்களோடும் கூடிய தாயும் உள்ள 'பில்வாடவி' எனப்பெயர் கொண்ட மிகவும் பாவனமான ஓர் க்ஷேத்திரம் இருக்கின்றது. அந்தப் பில்வ வனத்தில் அமிர்தகடத்தினுடைய மத்தியிலிருந்தும் பக்தர் களை யனுக்கிரகிக்கவேண்டியதற்காக ஸ்ரீ சந்திரசேகரர் லிங் கரூபியாக ஆவிர்ப்பவித்திருக்கிறார். அந்த இடத்தில் விள ங்கும் அமிர்த பத்மினியில் ஸ்நானம்செய்து மார்க்கண்டே யர் முன்னும் நித்தியத்துவத்தை யடைந்திருக்கிறார். காவே ரியில் தக்ஷிணதீரத்தில் சுவேதாரண்ய க்ஷேத்திரத்திற்குத் தென்பாகத்தில் அரையோஜனை தூரமுடையதாயும், ஸகல புண்ணிய க்ஷேத்திரங்களிலும்சிறந்ததான இம்மகாக்ஷே த்திரத்தையடைந்து அங்குள்ள பரிசுத்தமான நான்கு தீர்த் தங்களிலும் ஹே பாக்கியசாலியான பிரமிதியே, ஸ்நானம் செய். பர்வகாலத்தில் விசேஷமாகவும் ஒவ்வொரு மாஸத் தின் ஆரம்பத்திலும், ஒருவருஷம் முடிகிற பரியந்தம் தவ றுமல் நீ ஸ்நானம் செய்து வந்தாயேயானுல் உனக்கேற்

பட்டிருக்கும் இந்தப் பிரும்மசாபத்திலிருந்தும் நீ முக்தியடைவாய். இங்கு விளங்கும் யமனுடைய சரீரம் விழுந்த இடமான புண்ணியப் பிரதமான கயா தீர்த்தத்தில் அச்வினி நக்ஷத்திரத்தோடுகூடிய பௌர்ணமியையுடைய மாஸத்தில் பிராதக்காலத்தில்சுத்தனுபிருந்துகொண்டு 'இமம் யம' என்கிற மந்திரத்தை மூன்று தரம்ஜபித்துக்கழுத்தளவு ஜலத்திலிருந்துகொண்டு சூரிய உதயத்திற்கு முன் எவன் ஸ்நானம் செய்கிறானே அவன் இந்தப் புண்ணிய தீர்த்தத்தினுடைய ஸம்பந்தத்தால் குஷ்டம் முதலான மகா பாபங்களிலிருந்தும், சூதிரஸ்திரீ ஸங்கமம் முதலான பாபங்களிலிருந்தும் சிக்கிரமாக விடுபடுகிறான். உன்னுடைய பாபசுத்தியின் பொருட்டுச் சிறந்த உபாயமானது சொல்லப்பட்டிருக்கிறது. இந்தப் புண்ணியதீர்த்தத்தில் ஸ்நானத்தால் ஏற்படும் உத்தமமான வைபவமானது முந்தியே என்னால் அறியப்பட்டிருக்கின்றது. பிர்ம்மஹத்தி, கோஹத்தி, குருஹத்தி பித்ருவதம் முதலிய மகாபாதகங்களையும், உபபாதகங்களையும் செய்திருக்கும் ஒருவன் கிருத்திகா மாஸத்தில் பானுவாரத்தில் அருணோதய காலத்தில் புண்ணியமான இங்குள்ள ஸூதாபுஷ்கரணி தீர்த்தத்தில் நாபியளவு ஜலத்திலிருந்துகொண்டு சகல "பாபங்களிலிருந்தும் நான் விடப்பட்டவனுக ஆகிறேன்" என்று சொல்லிக்கொண்டு 'அஸத்யே' என்ற மந்திர ஜபத்துடன் மூன்று தடவை ஸ்நானம்செய்து மறுபடியும் ஒரு தடவை ஸ்நானம் செய்தானுகில் முக்தனுய் விடுகிறான். என்னால் சொல்லப்பட்ட இதைச் சத்தியமாக அறியவேண்டும். இங்குக்கூறிய விதிப்படி ஸ்நானம் செய்து அமிருதகடேசுவரரான ஸ்ரீ பரமசிவனையும் தியானிப்பானுகில் சகல ஐசுவரியங்களையும் அடைகிறான். கபாலமென்று பெயர்கொண்ட புண்ணிய தீர்த்தத்தில் சிரேஷ்டமான

மார்க்கசீர்ஷமாஸத்தில் வியதீபாத புண்ணியகாலத்தில் சூர்யோதய சமயத்தில் "ஆப்பிரும்மன்" என்ற மந்திரத்தால் பக்தியுடன் தீர்த்தத்தை அபிமந்த்ராணம் செய்து தொடையளவு தீர்த்தத்திலிருந்துகொண்டு ரோகிணி நக்ஷத்திரத்தோடுகூடிய தினத்தில் எவன் ஸ்நானம்செய்கிருனே அவன் சகல பாபங்களிலிருந்தும் விடுபட்டவனுகிருன். மிருத்யுஞ்சயமெனப் பெயர்கொண்ட மார்க்கண்டேயருடைய கூபத்திலுள்ள புண்ணிய தீர்த்தத்தில் 'மிருத்யுஞ்சய' என்கிற மந்திரத்தை ஜபித்து அந்தத் தீர்த்தத்தைக் கடங்களில் எடுத்து இந்த மந்திரத்தால் அபிமந்திரணம் செய்து அந்தத் தீர்த்தங்களால் சிவராத்திரி புண்ணிய காலத்தில் எவன் ஸ்நானம் செய்கிருனே அவன் 'கிருதக்னம்' என்ற தோஷத்தைச் செய்தவனுயிருந்தபோதிலும் அதிலிருந்தும் விடுபட்டுச்சிவனுக்கு வாஸஸ்தானமான கைலாஸத்தையடைகிருன். இங்கு விளங்கும் புண்ணிய தீர்த்தங்களில் ஸங்கிராந்தி முதலிய புண்ணிய காலங்களில் அந்தந்த ஸமயங்களுக்குற்ற மந்திரங்களை ஜபித்து ஸ்நானம்செய்து தமது சக்திக்கியன்றவாறு ஸ்ரீ அமிருதகடேசுவாருடைய ஸந்நிதியில் பொருள், பசு, பூமி, வஸ்திரம், சுவர்ணம் முதலியவைகளைத் தானம் செய்து அந்த க்ஷேத்திரம் பூராவும் பிரதக்ஷிணம் செய்தால் அதனுல் பூப்பிரதக்ஷிணம் செய்த புண்ணியத்தைப்பெற்று முடிவில் ஸ்ரீ பரமேசுவரனுடைய ஸாலோக்கியத்தையடைகிருன். அமிர்தகடேசுவரமென்று பிரசித்திபெற்ற இந்த க்ஷேத்திரத்திற் கொப்பாக மற்றென்றைக் கூறவியலாது. மிகஉத்தமமான இந்தப்பில்வாடவீ ஸ்தானத்தை நீஅடைந்தாயேயாகில் சாபத்திலிருந்தும் விடுபட்டு முக்தியையடைவாய். இதிற்சங்கை வேண்டாம்" என்று தமது சிஷ்யரான பிரமிதி என்னும் ராஜரிஷியிடம்கூறித் தீர்க்கஜீவி என்றகுரு

தமது ஆச்ரமம் சென்றார். அவ்வரசனும் தனது குருவால் செய்யப்பட்ட உபதேசத்தைப் பிரமாணமாகக் கொண்டு அவர் கூறியபடியே சகல தர்மங்களையும் அனுஷ்டித்தான். அவை பூர்த்தியானவுடன் தனக்கேற்பட்டபிராம்மணசாபத் திலிருந்தும் விடுபட்டான். தனக்குற்ற வைதிககர்மாக்களில் அதிகாரமும்பெற்று அந்த க்ஷேத்திரத்தினுடைய வாயவ்ய திக்கில் ஒரு பாணத்தைப் பிரயோகம் செய்தால் எவ்வளவு தூரம் வரையில் செல்லுமோ அவ்வளவு கணக்குள்ள தூரத் தில் தரிசன மாத்திரத்தால் புக்தியையும், முக்தியையும் அளிக்கக் கூடியதான ஒரு சிவலிங்கத்தைச் சாஸ்திரவிதிப் படி கிழக்கு முகமாகப் பிரதிஷ்டை செய்தான். அமிர்தக டேசுவரரிடத்திலிருந்தும்தனக்கிஷ்டமான வரங்களைப்பெற் றதனுல் சந்தோஷங்கொண்டு அவருடைய ஆலயத்திற்குச் சிறந்த சிற்பிகளைக்கொண்டுப்ராகாரம், மண்டபம், கோபுரம் முதலான திருப்பணிகளைச் செய்து லோகோபகாரத்தின் பொருட்டுப் பின்னும் அந்த ஆலயத்திற்குச் செய்யவேண் டிய பரிஷ்காரங்களையும் பொருளைப் பொருட்டாகக் கருதா மல் நன்கு செய்தான். அமிர்தகடேசுவரருக்கும் சிறந்த பல ரத்தினங்கள், முத்துக்கள் முதலியவைகளால் செய்யப் பட்டனவும், அதிக விலையுள்ளனவுமான ஆபரணங்களைச் செய்து பக்தியுடன் ஸமர்ப்பணம்செய்தான். பின்னும்அந்த பகவத்ஸந்நிதியில் பிராம்மணர்கள், யோகிகள், மற்றுமுள்ள ஏழைகள் முதலியவர்களுக்குச் சகல பக்ஷியங்களுடனும் கூடிய அன்னதானத்தையும் அதிகபக்தியுடன் நடத்தினுன். ஸந்நிதியில் லக்ஷக்கணக்கான தீபங்களையும் போட்டுப் பக வானுக்குத் திருப்திசெய்தான். விதிப்படி பகவானை நன்கு பூஜித்து அவருடைய பூஜாகைங்கரியத்திற்காக ஆயிரக் கணக்கான சுவர்ணங்களையும் அர்ப்பணம் செய்தான். இவ் விதம் பிர்மசாபத்திலிருந்தும்விடுபட்ட அவ்வேந்தன் தனது

சக்திக்கியன்றவரையில் விஸ்தாரமாய் அமிருதகடேசுவரரை ஆராதனம் செய்து அவருடைய அனுக்கிரகத்தைப் பெற்றுச் சந்தோஷத்துடன் தனது நகரத்தையடைந்தான். எவ்வித மகாபாபங்களையும் நிவர்த்தி செய்கின்றதான இந்தப் புண்ணிய க்ஷேத்திரத்தில் விளங்கும் அமிர்தகடேசுவரருக்குத் தனுர்மாஸத்தில் சிவநக்ஷத்திரத்தில் பூர்ணிமாதிதியின் இரவில்(பட்டணம் படியால்)நான்குபடியளவுகொண்டதும் ஈக்களில்லாமல் சுத்தமாயிருக்கிறதுமான தேனை ஆடையோடுகூட அபிஷேகஞ்செய்து, பிறகு சுத்தமான இருபது துலாம் நிறையுள்ள கோக்ஷீரத்தால் எவர்கள் அபிஷேகம் செய்கிறார்களோ அவர்கள் ஸாக்ஷத்சிவஸ்வரூபர்களாகவே ஆகிறார்கள். அவர்களுக்கு எவ்வளவு பலமென்று கூறுவதற்கொருவராலுமியலாது. இவ்விதம் சகலப்பிராணிகளுக்கும் பகவத் தரிசனத்தால் இந்த க்ஷேத்திரம் புத்தியையும் முக்தியையுமளிக்கின்றது. ஹே முனிகளே! மற்றொரு விசேஷமும் இங்குண்டு. அதையும் உலகிலுள்ளோர் அறிய வேண்டி இப்போது கூறுகின்றேன். இந்த அமிர்தகடேசுவரரை எவர்கள் ஆராதிக்கிறார்களோ அவர்களுடைய வம்சத்தில் முன்னோர்களான நூறு பேர்களும் சிவ ஸாரூப்யத்தை யடைந்து சிவலோகத்தில் வசிக்கிறார்கள். அர்ச்சித்த புருஷன் அந்த தேகத்தினுடைய முடிவு ஸமயத்தில் சிவஸாயுஜ்யத்தைப் பெறுகிறான். மாக மாஸத்தில் 'மிருக பத்மினி' என்ற இங்குள்ள தீர்த்தத்தில் விதிப்படி ஸ்நானம் செய்து பக்திச் சிரத்தையுடன் அமிர்தகடேசுவரருடைய ஸந்நிதியில் பசுவின் நெய்யால் தவறாமல் ஒரு மாத பரியந்தம் எவன் தீபம் போடுகிறானோ அவன் அதே ஜன்மாவில் ஸாம்ராஜ்ய லாபத்தை யடைகிறான்.

அதிகம் வளர்ப்பதில் பயன் யாது? எந்த மனிதன் எந்தமாதிரியான பலத்தை விரும்பி பில்வாரண்யத்தில் விள

ங்கும் பரமேசுவரனைப் பூஜிக்கிறனோ அந்த மனிதன் அந்த மகாதேவனுடைய பிரஸாதத்தால் சகலமான இஷ்டங்களையும் பெறுகிறன். மிகவும் சிறந்ததான இந்த அத்தியாயத்தை எவர்கள் படிக்கிறர்களோ அவர்கள் சந்திரன் நக்ஷத்திரம் இவைகளுள்ளவரையில் சிவலோகத்தில் வசிக்கின்றர்கள். இந்த அத்தியாயத்தைத் தேவப் பிராம்மண ஸந்நிதியில் படிக்கவேண்டுமேயல்லாது நாஸ்திகர்களுக்குச் சொல்லக்கூடாது. மிகவும் பரிசுத்தமாயும், மிகவும் புண்ணியத்தால் அடையத் தகுந்ததாயுமிருக்கிற அமிர்தகடேசுவருடைய இந்த அத்தியாயத்தை வேதாந்த சாஸ்திரத்தின் தத்துவத்தையறிந்த எந்த வித்வான்கள் ஆதரவுடன் ஸ்மரிக்கிறர்களோ அவர்கள் மகேசுவாருக்கு வாசஸ்தானமான கைலாஸ பர்வதத்தின் சிகரத்தை யடைகிறர்கள். இது சத்தியம் என்று நிரூபித்து அத்தியாயத்தையும் முடித்தார்

இவ்விதம் ஸ்காந்த மென்கிற மகாபுராணத்தில் ஸப்தாரண்ய ப்ரசம்ஸையில் பில்வாரண்ய மகாத்மிய மென்கிற 166ஆவது அத்தியாயம் முடிவுபெற்றது. சுபம்!

---

## அத்தியாயம் 8.

(இந்த அத்தியாயத்தின் துவக்கத்தில் 'கெட்ட நடத்தையுள்ள ஒரு ஸ்திரீ இந்த பில்வாரண்ய க்ஷேத்திரத்தில் வந்து புண்யதீர்த்தத்தில் ஸ்நானம்செய்து அமிர்தகடேசுவரரையும் ஆராதித்து அவருடைய அநுக்கிரஹத்தால் உத்தமகதியை அடைந்தாள்' என்று கருத்துக்கொண்ட ஒரு சரித்திரம் பூர்ணமாக எழுதப்படாமல் எட்டுசுலோகங்களில்

மாத்திரம் எழுதி விடப்பட்டிருக்கிறது. அதனால் அந்தச் சரித்திரத்தை விஸ்தாரமாக எழுத முடியவில்லை. ஆதலின், அதைவிட்டு அதற்குமேலுள்ள விஷயங்கள் நிரூபிக்கப்படுகின்றன).

ரிஷிகள் ஸூதமஹருஷியை வினவுகின்றதாவது :— "ஸகல சாஸ்திரங்களையும் நன்கறிந்த சிறந்த பண்டிதரான ஹே ஸூதமஹருஷியே, பில்வாரண்யத்தின் மாஹாத்மியம் அமிர்தகடேசுவாருடைய மஹிமை, எமனுடைய ஸம்ஹாரம், இந்த க்ஷேத்திரத்தினுடைய விஸ்தாரம் முதலிய தங்களுடைய முகாம்போஜத்திலிருந்தும் வெளிவந்த சிறந்த பல விஷயங்களை எவ்வளவு செவியுற்றும் எங்களுக்குத் திருப்தி ஏற்படவில்லை. இப்பொழுது ஸூதாகடத்திலிருந்துமுண்டான பரமேசுவரனுக்கு நாலுபக்கங்களிலும் விளங்கும் சிரேஷ்டமான லிங்கங்களுடைய மஹிமையையும் கருணையால் தாங்கள் எங்களுக்குப் போதிக்கவேண்டும்" என்று பிரார்த்தித்தார்கள்.

ஸூதர்:— இந்த க்ஷேத்திரத்திற்கு அருகில் பலவிடங்களிலும் தேவதைகளால் அனேக லிங்கங்கள் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன. அவையாவன:— இந்த அமிர்தேசுவாருக்கு உத்தாபாகத்தில் ஒரு குரோச தூரத்தில் பஞ்சாக்ஷரபுரமென்னும் பெயர் பெற்ற மிகவும் பரிசுத்தமான ஒரு ஸ்தானம் இருக்கின்றது. அதில் பஞ்சாக்ஷரமென்று திருநாமம்பூண்ட அழகான ஓர் லிங்கமிருக்கின்றது. அந்தலிங்கத்தினுடைய தரிசனமாத்திரத்தால் ஸகல பாபங்களும் விலகிவிடுகின்றன. முன்னொரு ஸமயத்தில் துவாதசஆதித்தியர்கள் என்ற சில தேவதைகள் அதிகக் கீர்த்தியையடைந்திருப்பினும் விசேஷமான தேஜோவிருத்தியை அடையும் பொருட்டு இந்த க்ஷேத்திரத்தில் தவம் புரிந்தார்கள். இவர்

களின் தவத்தினுல் ஸந்தோஷமடைந்த பஞ்சாக்ஷரேசுவர ரென்ற பகவானும் அவர்கள்விரும்பியவரத்தை அளித்தார். இந்த க்ஷேத்திரத்திற்குக் கிழக்குதிக்கில் அரைக்குரோச தூரத்தில் மஹாச்மசானமெனப் பெயர்வாய்ந்ததும் ஸகலப் பிராணிகளாலும் பிரியத்துடன் வசிக்கப்பட்டதுமான சிற ந்த ஒரு புண்யஸ்தானமிருக்கின்றது. அந்த இடத்தில் முன் பிர்ம்மகல்பத்தினுடைய முடிவில் பிர்ம்மாவானவர் தஹிக்கப்பட்டபடியால் புராணங்களில்இந்தஸ்தானத்திற்கு மஹாச்மசான மென்றும் ஒரு பெயர் கூறப்படுகின்றது. இந்த க்ஷேத்திரத்தில் விளங்கும் 'பிரும்மஸரஸ்' என்கிற புண்ணிய தடாகத்தின் கரையில் 'பிரும்மபுரீசர்' என்றுபெயர் கொண்டதும் தேவதைகளால் பூஜிக்கப்பட்டதுமான லிங்க மானது பிரகாசிக்கின்றது. இந்த லிங்கத்திற்குத் தென்பா கத்தில் அமிர்தகடேசுவரரை ஆராதிக்கவேண்டி மார்க்கண் டேயரால் சுத்தமான தீர்த்தத்தையுடைய ஒரு கிணறும் உண்டுபண்ணப்பட்டிருக்கிறது. பிரும்மஸரஸ் என்ற புண் ணிய தடாகத்தில் எவர்கள் ஸ்நானஞ்செய்து பிரும்மபுரீசுவர ரையும் தரிசிக்கிறுர்களோ அவர்கள் பிரும்மஹத்தி முதலா ன ஸகலபாபங்களையும் நாசம்செய்து முடிவில் பிரும்மலோ கத்தையடைகிறுர்கள். அந்த க்ஷேத்திரத்திற்கும் கிழக்கு பாகத்தில் அரைக்குரோச தூரத்தில் அவிமுக்தேசுவரமெ னப் பெயர்பெற்ற புண்ணியக்ஷேத்திரமொன்றிருக்கின்றது. அங்குள்ள அவிமுக்த லிங்கத்தினுடைய தரிசனத்தினுல் ஸகலப் பிராணிகளும் வாராணஸி க்ஷேத்திரத்தில் போல முக்தர்களாய்விடுகின்றுர்கள். முன்னெரு ஸமயத்தில் ஒன் பது துர்க்காதேவி(நவசக்தி)களும் தாங்கள் விசேஷமான சக்தியைப் பெறவேண்டுமெனக்கருதி இந்தக்ஷேத்திரத்தை அடைந்து மூன்று காலங்களிலும் நியமமாய் ஸ்ரீ சங்கரரை ஆராதித்துக்கொண்டு தவம்புரிந்தார்கள்.

இவர்கள் தவத்திலமர்ந்து மூன்றுண்டுகள்சென்றவுடன் தவத்தால் திருப்தியடைந்த மகேசுவரன் இவர்களுக் கெதிரில் தோன்றி அவர்களுடைய இஷ்டத்தையளித்தார். இவ்விதம் அவிமுக்தேசுவாருடைய ஸந்நிதியையடைந்ததினுல் நமது இஷ்டம் சீக்கிரமாகப் பூர்த்தியாயிற்றென்று மிகுந்த ஸந்தோஷத்துடன் அந்த துர்க்கைகள் தங்களிருப்பிடம் சென்றுர்கள். அமிர்தகடேசுவாருக்குத் தக்ஷிண திக்கில் அரைக்குரோசதூரத்தில் மஹாபுத்திசாலியான மார்க்கண்டேயர் மார்க்கண்டேயேசுவரரென்று அதிகப் பிரசித்திபெற்ற சிறந்ததோர் லிங்கத்தை ஸ்தாபித்திருக்கிறுர். மேலும், பாலமுனியான அவர் தமது பெயராலேயே ஒரு சிறந்த தீர்த்தத்தையும் உண்டுபண்ணி மிகவும் பக்திசிரத்தையோடு கூட அந்தலிங்கத்தை விதிப்படி பூஜித்தார். அந்த இடத்தில் தம்முடைய பிதுருக்களையுத்தேசித்து பர்வாக்களில் எவர்கள் சிராத்தம் செய்கிறுர்களோ அவர்களுடைய பிதுருக்கள் ஒருகல்பம் பூராவும பிதுருலோகத்தில் சுகமாய் வஸிக்கிறுர்கள். இந்த க்ஷேத்திரத்தில் பர்வம் முதலிய புண்ணியகாலங்களில் எவர்கள் விசேஷதானங்களைச் செய்கிறுர்களோ அவர்களுக்கேற்படும் புண்ணியபலத்தை ஸ்ரீ பரமேசுவரனுல்தான் கூறமுடியும். அதற்குத் தக்ஷிண திக்கில் அர்த்தக்குரோசதூரத்தில் மூன்றுலோகங்களிலும் பிரஸித்தமாயும் சோளேசுவரரென்று பெயர்கொண்ட ஒரு லிங்கம் விளங்குகின்றது. அந்த லிங்கத்தை ஒருதடவை தரிசித்ததினுல் ஸகலபாபங்களும் விலகிவிடுகின்றன. இந்த க்ஷேத்திரவிஷயமாய் ஓர் இதிஹாஸமுண்டு. அஃதாவது— முன்னொரு ஸமயம் சிபி என்ற அரசசிரேஷ்டன் அரண்யத்தில் வேட்டையாடிக்கொண்டிருக்கும்பொழுது அவ்வரசனைக் கழுகினுல் வெருட்டப்பட்டதும், அதிகபயத்துடன் கூடியதுமான ஒருபுறு சரணமாக அடைந்தது. அம்மன்னனும்

அதற்கு அபயப்பிரதானம் கொடுத்தான். இப்புருவை ஆகாரமாக்கிக்கொள்ளவேண்டும் என்று பின்தொடர்ந்துவந்த கழுகு இப்புருவை ரக்ஷிக்கும் அரசனைப்பார்த்து "ஹே அரசனே! என்னுடைய ஆகாரத்தை எனக்குக் கொடுக்க வேண்டும்" என்று கோபத்துடன் கேட்டது. இதைச்செவியுற்ற அரசன் "என்னைச் சரணாகதமாக அடைந்த இப்புருவை நான் கொடுக்கமாட்டேன். நீ பசியால் வருந்தினால் இந்தப் புருவிற்குச் சரியான நிறை மாமிசத்தைத் தருகிறேன்" என்று மறுமொழி கூறினான்.

இதைக்கேட்ட கழுகு "வேறு மாமிசங்களை நான் புஜிக்கமாட்டேன்; உமது சரீரத்திலிருந்தும் இந்தப்புருவிற்குச்சரியான நிறை மாமிசம் அறுத்துக்கொடுத்தால் ஏற்றுக் கொள்ளுவேன்" என்று கூறிற்று.

அரசனும் அக்கழுகின் அபிப்பிராயத்திற்கிணங்கி ஒரு தராசில் தனது சரீரததை அறுத்துப் புருவின் நிறைக்குச் சமமாகப்போட்டான். இவன் எவ்வளவு அறுத்துப்போட்டும் பக்ஷிச்ரேஷ்டமான அப்புருவின் நிறைக்குச் சமனெடையாக ஆகவில்லை. இதையறிந்த அரசனும் அதிகதுக்கத்தையடைந்து, இந்தக்ஷேத்திரத்தில் விளங்கும் ஸ்ரீசந்திரசேகருடையஸந்நிதியில் பக்ஷியோடுகூட நிறுக்கவேண்டியதற்காகத் தானும்அந்தத்தராசின் மற்றொருதட்டில்ஏறினான். ஏறியவுடன் இருவருடைய நிறையும் சமமாயிருந்தது. அதைப் பார்த்த பூபதியும் ஸந்தோஷத்தையடைந்தான். உடனே ஸ்ரீ பரமேசுவரன் விருஷபாரூடராய்அங்குத்தோன்றி அந்த சிபிச்சக்கிரவர்த்திக்கு அவன்செய்த சிறந்த புண்ணியதர்மத்தால் தனது வாஸஸ்தலமான கைலாஸத்தை யளித்தார். அந்தக்கழுகும் ராஜா தமது பிரதிக்ஞையை நன்கு நிறைவேற்றிவிட்டாரென்று மிகவும் ஸந்தோஷத்தையடைந்தது. இவ்விதம் இந்தக்ஷேத்திரத்திற்கு ஆச்சரியப்படும்படியாகப்

பல மாஹாத்மியங்களுண்டு. ஸூதாகடேசுவரரான பர மேசுவரருக்கு நான்குதிக்குகளிலும் அனேகம் லிங்கங்கள் இருக்கின்றன. காசியில் ஸ்ரீ விசுவநாதரின்ஸமீபத்திலிருப் பதுபோல இந்தக்ஷேத்திரத்திற்குச்சமீபத்திலும் ஸ்ரீராமன் முதலானவர்களாலும் ஜாம்பவான் முதலானவர்களாலும் பிரதிஷ்டை செய்யப்பட்ட லிங்கங்களுடன் பிரகாசிக்கும் க்ஷேத்திரங்கள் நான்குபக்கங்களிலும் பல இருக்கின்றன. அவைகளுக்குள் இப்பொழுது என்னால் சுருக்கமாய்ச் சில க்ஷேத்திரங்கள் நிரூபிக்கப்பட்டன. கோடி வருஷகாலம் சொன்னாலும் அவைகளை விஸ்தாரமாக எடுத்துக்கூற என்னா லும் சாத்தியமில்லை. ஹே முனிச்ரேஷ்டர்களே, பின்னும ஏதாகிலும் புண்ணியசரிதங்களைக் கேட்கவேண்டுமென்ற விருப்பமிருந்தால் தெரிவியுங்கள்" என்றுகூறி இப்புராணத் தின முடிவையறிவிக்கின்றதும் பலசுருதியுமான அடியில் வரும் ஒரு சுலோகத்தையும் ஸூதமஹரிஷி கூறுகின்றார்.

घटपुरमभितो ये प्रोक्तलिङ्गानि विप्राः
प्रतिदिनमपि सेवन्ते विशिष्टेष्वहस्सु ।
सवितुरुदयकाले चामृतस्वाकरे ते
कृतदिननियमाःस्वर्लोकमेवाभियान्ति ॥

"கடபுரமென்கிற இந்த அமிருதகடேசுவர க்ஷேத்திரத் திற்குச் சுற்றிலும்விளங்கும் சிவலிங்கங்களை ஒவ்வொரு புண் ணியதினங்களிலும் சூரியோதயகாலத்தில் அமிருதஸ்வாகர மென்கிற பாவனமான தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து எவர் கள் தர்சிக்கிறார்களோ அவர்கள் ஸ்வர்க்கலோகத்தையடை ந்து எப்பொழுதும் சுகமாய்வாழ்ந்துகொண்டிருப்பார்கள்"

சுபம்.

श्रीमल्लोकगुरूत्तमैर्बुधवरैः श्रीकामकोटीश्वरैः
दत्तं लभ्यमनल्पपुण्यनिवहैस्तच्छासनं पुष्पवत् ।
कृत्वा मूर्धनि सादरं शुभकथा बिल्वाटवीस्वामिनः
द्राविड्या लखितेयमस्तु सततं श्रीशङ्करप्रीतये ॥

லோகாசார்யர்களுக்குள் மிகச் சிறந்தவர்களாயும் ஸ்ரீ ஸரஸ்வதியின் அவதாரரூபமாயும் விளங்கும் கும்பகோணம் ஸ்ரீகாஞ்சி காமகோடிபீடாதிபதிகளான ஸ்ரீ ஜகத்குரு மஹாஸ்வாமிகள் அவர்களால் கொடுக்கப்பட்டதும் அதிகமான புண்யகர்மபரம்பரைகளால் அடையத் தகுந்த மஹிமை பொருந்தியதுமான திருக்கடவூர் க்ஷேத்திரபுராணத்தைத் தமிழில் மொழிபெயர்க்கவேண்டுமென்ற ஆக்ஞையைப்பக்தி சிரத்தையுடன் எனது சிரஸால் புஷ்பம்போல் வஹித்து எனது சிற்றறிவிற் கெட்டியவரையில் தமிழ் மொழிகளால் வெளியிடப்பட்ட ஸ்ரீ பில்வாடவீ க்ஷேத்திராதிபதியான அமிருதகடேசரெனப் பெயர்பெற்ற ஸ்ரீமஹேசுவருடைய இப்புண்ணிய சரிதமானது ஸ்ரீ சங்கருக்குத் திருப்தியாக உலகில் இருக்கட்டும்.

ஸ்ரீ திருக்கடவூர் க்ஷேத்திரபுராணம் முற்றிற்று.

---

